# கல்கி

KALKI
1.2.87
ரூ 1.50



## சுவடிகள் சொல்லும் கதை!




# பாப்பா வளர்ச்சிக்கான திட உணவுகளில் பாசத்தாய் அளிக்கும் முதலிடம் ஃபாரெக்ஸ்®

தாய், தன் குழந்தைக்கு தேர்ந்தெடுக்கும் முதலான திட உணவு புதிய செழுமையான ஃபாரெக்ஸ். காரணம்:

பாப்பாவின் உடல் நலத்திற்கான புரதமும், ஜீரணத்திற்கு உகந்த கொழுப்புச் சத்தும் சரியான அளவில் கொண்டது.

பாப்பாவுக்கு ஆரோக்கியமான ரத்தத்தை தரவல்ல இரும்புச் சத்துள்ளது.

எலும்பும் பற்களும் வலுவோடு வளர்ந்திட கால்சியமும் ஃபாஸ்ஃபரஸும் 2:1 என்ற அளவில் சேர்க்கப்பட்டது.

தின்னத் தெவிட்டாதது; கலப்பதும் கொடுப்பதும் எளிது.




**தாயன்பைக் கூறிடும் தரமிக்க திட உணவு ஃபாரெக்ஸ்®**

பால் சேர்க்கத் தேவையில்லை! நீருடன் கலந்து கொடுத்தாலே போதும்.

CLARION/B/GX/15/203

# சுற்றுலா பொருட்காட்சியைச் சுற்றி வந்த போது...



டிஸ்கோ டான்ஸ்?

"நகரங்களில் சிறந்தது மாஸ்கோ; பிடி களில் சிறந்தது...."

"உங்கள் வீட்டு எவர்சில்வர் கிண்ணம் 'பளிச்'சென மின்னும். ஐயோ பிசுபிசுப்பு... ஆஹா பளபளப்பு. வாங்கிடுவீர்...."

"நடிகர் திலகம் டாக்டர் சிவாஜி கணேசன் நடிக்கும் உன்னத திரைக் காவியம்...."

இடைவிடாது லபோ.... லபோ என அலறும் ஸ்பீக்கர் விளம்பரங்கள், நாம் உள்ளே நுழைந்திருப்பது சுற்றுலா பொருட் காட்சியில் என்று மண்டைக்குள் ஆணி இறக்கினார் போல அறிவித்துக் கொண்டிருக் கின்றன.

இன்றைய தேதியில் சென்னையில் 'க்யூ' வில் காத்திருக்காமல் டிக்கெட் வாங்கக் கூடிய ஒரே இடம் சுற்றுலா பொருட் காட்சி தான்.

கடைகள், கடைகள், ஜேஜே என்று கூட் டம். ஒரு கடையில் இளைஞர் ஒருத்தர், சிறிய தாய்ப் பிளாஸ்டிக் சமாசாரம் ஒன்றைக் காட்டி, ஜூஸ் பிழிய வசதியானது என்று அதைப் பழத்திலே அழுத்தி, பழத்தை அமுக்க ஜூஸ் 'ஜிவ்'வெனக் கொட்டியது.

எக்ஸ்போர்ட் கார்மெண்ட் கடைகளில் இளைய தலைமுறையினர் கும்பல். ரெடிமேட் பேண்ட், சர்ட் வாங்கத்தான். எட்டு ரூபாய், பத்து ரூபாய்க்கெல்லாம் தைத்த சட்டை எப்படி விற்க முடிகிறது என்பது விக்கிர மாதித்தனுக்கு, வேதாளம் போட வேண்டிய புதிர்.

கிரிக்கெட்டில் மேன் ஆஃப் தி மேட்ச் போல 'ஐட்டம் ஆஃப் தி எக்ஸிபிஷன்' என்று ஒரு பரிசைத் தந்தால், அதை 'டெல்லி அப்பளம்' ஈஸியாய்த் தட்டிக் கொண்டு போகும். அந்த ராட்சச சைஸ் அப்பளத்தை மிளகாய், உப்புப் பொடி தூவித் தர, வாங்கி வைத்துக் கொண்டு, இரண்டு மூன்று பேர் சேர்ந்து ஆளுக்கு ஒரு திசையிலிருந்து தின் பது சகஜமான காட்சி.

ரங்கராட்டினம் என்று ஒரே பெயரில் மொத்தமாய்ச் சொல்லிவிட்டாலும், இதிலே ஏகப்பட்ட ஜாதிகள், சைஸ்கள். நல்ல கும்பல். பெரியவர்கள்கூட குழந்தைகளாகி விடுகின்றனர். சுற்றும்போது குழந்தைகளு

**ராட்சச அப்பளாம்!**

**ரஜினி பேசுகிறார்!**

**கில்லாடி ராஜலட்சுமி!**

**சகிப்புத் திலகங்கள்!**

டன் சேர்ந்து அவர்களும் வீல் வீல் என்று ராட்சசத் தனமாய்த்தான் அலறுகின்றனர். பாதி பயம்! பாதி உற்சாகம்!

தீவுத் திடலில் நடுவே கூவம் ஓடுகிறது. அதிலே படகு விடப்படுகிறது. சில பேர் படகுப் பிரயாணமும் செய்வதைப் பார்க்க முடிந்தது. அவர்கள் படகை விட்டு இறங்கி வந்ததும், மாலை போட்டு, கைகுலுக்கி, 'சகிப்புத் திலகங்கள்' பட்டம் தரலாம். கூவம் நாற்றத்தைச் சகித்துக் கொண்டு படகுப் பயணம் செய்வதென்பது சுலபமான காரியமா?

அன்னை இந்திரா குழந்தைகள் உல்லாச உலகத்தில் குழந்தைகள் விளையாட்டுச் சறுக்கு மரம் இத்யாதிகள். குதிரை, யானை சவாரியும் உண்டு — எக்ஸ்டிரா செலவில். ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகள் தவிர மற்றவர்களுக்கு நுழைவுக் கட்டணம். உள்ளே போய், குழந்தைகள் விளையாடுவதைப் பெரியவர்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். அவ்வளவுதான். தினம் இரவு அங்கேயுள்ள மேடையில் டிஸ்கோ டான்ஸ், சிலம்பம், பொ.கா. குதிரை இன்னபிற நிகழ்ச்சிகள்.

போலீஸ் துறைப் பிரிவு. நுழைந்தவுடன் ஜகஜாலக் கில்லாடி ராஜலட்சுமி — ஆமாம் வியாழக்கிழமை ராஜலட்சுமியேதான் — படம் பெரிசாய். கீழே அவளது வீர தீர பராக்கிரமச் செயல்கள். எதிரே இன்னொரு திருட்டு ஆசாமி. பெயர் சில்வர் சீனிவாசன்! அடுத்து ஒரு போலீஸ்காரர் சிலை உருவில் நின்று, "என்னோடு நீங்கள் பேசலாம்" என்றார்.

"உங்கள் பேர் என்ன?"

"ரஜினிகாந்த்!"

"உங்க மாவீரன் படம் ஏன் ஊத்திக்கிச்சு?"

"நான் நடிகர் ரஜினிகாந்த் இல்லே; போலீஸ்காரர் ரஜினிகாந்த்!"

வருகிறவர்கள் எல்லாம் போலீஸ் துறையை மறந்து உங்களுக்குப் பிடிச்ச ஹீரோயின் யாரு?' ரீதியிலான கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருக்க, பக்கத்தில் ஓர் அறையினுள் ஒரு டிபார்ட்மெண்ட் ஆசாமி உட்கார்ந்து கொண்டு, ரஜினிகாந்த் குரலிலேயே அத்தனை கேள்விகளுக்கும் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

மாபெரும் கோயில் போல அமைக்கப் பட்ட அறநிலையத் துறை அரங்கம். உள்ளே ஏராளமான படங்கள் இருந்தன. ஆனால் ஒரே ஒரு படத்தை மட்டும் எவ்வளவு தேடியும் பார்க்க முடியவில்லை. அது முன்னாள் அறநிலையத்துறை மந்திரியான ஆர்.எம்.வீ. படம்தான். அதைப் போய்த் தேடியது என் தவறுதானே!

"என்னங்க! கீழே எல்லாம் ஒரே நெருஞ்சி முள்ளாய் இருக்கு? சரியா தரையைச் சுத்தம் பண்ணலேயா?"

"காணும் பொங்கல் ஜன நெரிசல் நெருஞ்சி முள் எல்லாத்தையும் கால்ல குத்திக் கிட்டுப் போயிடும்; இங்க கிரவுண்டு சுத்தமாயிடும்னு நினைச்சோம். பாவி ஜனங்க, முள்ளை எடுத்து, மறுபடி கீழேயே போட்டுட்டுப் போயிட்டாங்க!"

இப்போது லாரிகளில் மணல் கொண்டு வந்து பரப்பி வருகிறார்கள்.

கொசுறு (1): சுற்றுலா பொருட்காட்சியில், அயல்நாட்டு டூரிஸ்ட்டுகள், கண் பார்வை இழந்தோர், உடல்ஊனமுற்றோர் ஆகியோருக்கு அனுமதி இலவசம்.

கொசுறு (2): இந்த வருடம் காணும் பொங்கல் அன்று மட்டும் சுமார் இரண்டு லட்சம் பேர் பொருட்காட்சிக்கு வந்திருக்கிறார்கள். (போன வருடம் காணும் பொங்கலுக்கு 90,000 பேர்தான்.)

கொசுறு (3): பொருட்காட்சி மைதானத்தினுள் தின்பண்டக் கடைகள், ஜூஸ் ஸ்டால்கள் வைக்கிற உரிமையை இரண்டு லட்சம், மூணு லட்சம் என்று ஏலத்தில் கேட்டுப் பெற்றிருக்கிறார்கள் கடைக்காரர்கள்.

கொசுறு (4): வருடா வருடம் இந்தப் பொருட்காட்சி மூலம் அரசுக்குக் கிடைக்கும் லாபம் அதிகரித்து வருகிறதாம். இந்த வருடம் ரூ 40 லட்சம் லாபம் எதிர்பார்க்கிறார்கள்.

— எஸ். சந்திரமௌலி



# கல்கி

**மார்ச் 1 உ — ஸ்கூட்டர், மொப்பெட் மோட்டார் சைக்கிள் சிறப்பிதழ்!**

நீங்களோ அல்லது உங்கள் நண்பரோ ஸ்கூட்டர், மொப்பெட் அல்லது மோட்டார் சைக்கிள் வைத்திருப்பீர்களே! இவற்றில் ஏதேனும் ஒன்று சம்பந்தப்பட்ட ஒரு ரசமான அனுபவத்தைத் தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள்.

**முடிவு தேதி: பிப்ரவரி 10.**

"ஸ்கூட்டர் அனுபவம்" என்று தலைப்புத் தரவும். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு ரூ. 100/—

# இந்த மாதம்

# இராமநாதபுரம்

## மாதம் ஒரு மாவட்டம்

### கல்கி ஏந்தும் சமுதாயப் பணி

"முறுக்கு, மிளகு வடை, பட்டாணி சுண்டல் சார்.... சாப்பிட்டுப் பார்த்து வாங்குங்க சார்... முதல் போணி நீங்கதான் சார்...." — இப்படி சென்னை மெரினாக் கடற்கரையில் பரிதாபமாகக் கூவித் திரியும் சிறுவர்களைக் கேட்டுப் பாருங்கள்; அவர்களில் பெரும்பாலான சிறுவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்திலிருந்து வந்தவர்களாகத்தான் இருப்பார்கள். அவர்களது பெற்றோர்கள், குழந்தைகளின் பிஞ்சுத் தோள்களில் புத்தகச் சுமையை ஏற்றிப் பள்ளிகளுக்கு அனுப்பாமல் இப்படிக் குடும்பச் சுமையை ஏற்றுகிறார்கள் என்றால் அவர்கள் எந்த அளவிற்கு வறுமையில் வாடிக் கொண்டிருப்பார்கள்! இந்த வறுமையைப் போக்க இராமநாதபுரம் மாவட்டத்தில் என்ன செய்யப்பட்டிருக்கிறது? அரசாங்கத்தைத் தட்டிக் கேட்க வேண்டாமா?

ஆகவேதான், கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில், பதின்மூன்றாவது மாவட்டமாக இராமநாதபுரம் மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். இராமநாதபுரம் மாவட்டத்தில் வளமைக்குத்தான் வறட்சியே தவிர, பிரச்னைகளுக்கு அல்ல. எனவே இராமநாதபுரம் மாவட்டம் முழுவதிலுமுள்ள பிரச்னைகள் அல்லது அவரவர் ஊர்ப் பிரச்னைகள், இல்லையெனில் தனி மனிதர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகள் ஆகியவற்றோடு, அரசியல்வாதிகளுடைய — அமைச்சர்களுடைய — அதிகாரிகளுடைய மெத்தனப் போக்குகளையும், சமூக விரோதிகளின் அட்டகாசங்களையும் சுருக்கமாக எழுதி, உங்கள் முழுமையான முகவரியோடு கல்கி அலுவலகத்திற்கு அனுப்புங்கள். இவற்றோடு உங்கள் மாவட்ட வளர்ச்சிக்கான ஆலோசனைகளையும் உங்கள் மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள சாதனைகளையும் சேர்த்தே எழுதலாம்.

கல்கி அலுவலகத்திற்கு வரும் உங்கள் ஒவ்வொருவருடைய கடிதமும் கவனமாகப் பரிசீலிக்கப்பட்டு, அவற்றில் முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து, மார்ச் மாத மத்தியில், நமது கல்கி பிரதிநிதிகள் இராமநாதபுரம் மாவட்டம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்வார்கள்; உங்களைச் சந்தித்துப் பேசுவார்கள். அவர்கள் வரும் தேதி பற்றிய முழு விவரங்களும் பின்னர் தனித் தனிக் கடிதங்கள் மூலம் தெரிவிக்கப்படும்.

சுற்றுப் பயண முடிவில், கல்கி பிரதிநிதிகள், இராமநாதபுரம் மாவட்டக் கலெக்டரைச் சந்தித்துத் தாங்கள் சேகரித்த பிரச்னைகளுக்குரிய விஷயங்களைப் பற்றி விவாதித்துப் பதில்களைப் பெறுவார்கள். அவையெல்லாம் ஏப்ரல் மாதக் கல்கி இதழ்களில், செய்திகளாகவும் பேட்டிக் கட்டுரைகளாகவும், புகைப்படங்களாகவும் பிரசுரமாகும்.

**இராமநாதபுரம் மாவட்டம் பற்றிய பிரச்னைகளும், குறைகளும், அநீதிகளும், அக்கிரமங்களும் தவிர, சாதனைகளும் ஆலோசனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.2.87.**

எல்லாவற்றையுமே பிரசுரித்து விட முடியாது என்பது உண்மைதான் என்றாலும், நியாயமான பிரச்னைகள் அத்தனையும் மாவட்டக் கலெக்டரிடமும் சம்பந்தப்பட்ட மற்ற அதிகாரிகளிடமும் எடுத்துச் சொல்லப்படும். அதன் மூலம் அரசின் கவனத்தையும் அதிகாரிகளின் கவனத்தையும் திருப்ப முடியும். இவற்றோடு அன்றாட வாழ்க்கையின் யதார்த்தங்களை வெளிச்சம் போட்டுக் காட்டுவதன் மூலம் நமது சகோதர மக்களிடையிலும் ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த முடியுமல்லவா! உடனடியாக எழுதுங்கள்.

**உறையின் மேல் மாதம் ஒரு மாவட்டம் — இராமநாதபுரம்' என்று அவசியம் குறிப்பிடுதல் வேண்டும்.**

**— ஆசிரியர்**

தற்போது நமது பிரதிநிதிகள் திருநெல்வேலி — கட்டபொம்மன் மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருக்கிறார்கள். திருநெல்வேலி மாவட்டம் தொடர்பான பரபரப்பான செய்திகளும் கட்டுரைகளும், பேட்டிகளும் பிப்ரவரி 15, 22 கல்கி இதழ்களில் இடம்பெறும்.






* பசுமையான சூழல்

# சுவடிகள் சொன்ன கதை!

**நகத்தளவு நூலிலிருந்து நாலு பேர் தூக்க வேண்டிய அளவு நூல் வரை இருந்தாலும் நுனிப் புல் மேய்பவருக்கு இந்த நூலகத்தில் இடமில்லை!**

* ஆளுயர சைஸ் புத்தகங்கள்



**மா**ர்கழி மாதத்து அதிகாலைக் குளிர் மாறி, இதமான வெயில் நம்மை ஊடுருவிச் சுறுசுறுப்பு ஏற்றும் காலை நேரம். தழைத்து வளர்ந்த மரங்கள் நிறைந்த சோலையினூடே நிழலும் வெயிலும் மாறி மாறிக் கோலம் போடும் அழகிய அமைதியான சாலை....

அதன் வழியே நடக்கையில் குறுக்கும் நெடுக்குமாகத் துள்ளி ஓடும் அணில்கள்; கண்களுக்கு விருந்து படைக்கும் பசுமையோடு போட்டி போட்டுக் கொண்டு செவிகளுக்கு இசை விருந்து படைக்கும் பறவைகள்....

புகையும் புழுதியும் மண்டிய சென்னை நகரத்தின் மையத்தில்தான் இப்படியோர் இடம் இருக்கிறது! அந்த இடம்: தியாசாபிகல் சொஸைட்டி வளாகம். அடையாறு ஆலமரம் — உலகத்திலேயே இரண்டாவது மிகப் பெரிய ஆலமரம் — இருக்கிறதே அதே இடம் தான்!

இந்த ரம்மியமான சூழலில் ஒரு நவீனமான கட்டடம் கம்பீரமாக நிற்கிறது. அது தான் அடையாறு நூலகம். அங்கு நிலவிய ஆழ்ந்த அமைதியைக் கலைக்க மனமின்றி ஓசை எழுப்பாமல் மாடிப் படிகளில் ஏறிப் போனோம்.

பால்கனியிலிருந்து வெளியே எட்டிப் பார்த்தால் ஒரு சிறிய குளம் தெரிந்தது. அதில் நீலோத்பலமும் செவ்வல்லியும் பூத்திருந்தன.

எந்தப் பக்கம் திரும்பினாலும் ஒழுங்கும், சுத்தமும் அமைதியும் கலந்த ஓர் ஆழமான சூழ்நிலை. கண்களைக் கவர்ந்தது ஓர் அறிவிப்புப் பலகை: "நூலகத்துக்கு வருவோர் சரியாக உடையணிந்து வர வேண்டும்" என்று அது கண்டிப்புடன் எச்சரித்தது!

சீதா நீலகண்டன் இன்முகத்துடன் வா வேற்று நூலகத்தைச் சுற்றிப் பார்க்கச் சொன்னார். அகலமான ஜன்னல்கள் வழியே வரும் ஏராளமான வெளிச்சத்தில் பிரகாசித்தது படிக்கும் அறை. புத்தகங்களும் பத்திரிகைகளும் கண்காட்சிப் பொருள்கள் போல் அலுங்காமல் இருப்பதைக் கண்டு அதிசயித்தோம். ஆராய்ச்சிப் பகுதியில் புத்தகங்களின் பக்கங்கள் புரட்டப்படும் ஓசையும், வெள்ளைத் தாளில் பேனாக்கள் ஓடும் கரகரப்புச் சப்தமும் மட்டுமே கேட்டன.

''இந்த நூலகத்தில் ஏராளமான பழைய ஓலைச் சுவடிகள் உண்டு என்று கேள்விப் பட்டிருந்தோம். அவற்றில் மருந்துக்குக் கூட ஒன்று கண்ணில் படவில்லையே?''

சீதா நீலகண்டன் ஒரு மர்மப் புன்னகையுடன் தம் மேஜை இழுப்பறையிலிருந்து ஒரு சாவிக் கொத்தை எடுத்துக் கொண்டு, ''இப்படி வாருங்கள்'' என்று எங்களை அழைத்துச் சென்றார்.

கீழ்நோக்கி இறங்கிச் சென்ற படிகள் எங்களை ஒரு கனமான மரக்கதவின் முன் கொண்டு நிறுத்தின. பூட்டியிருந்த கதவைத் திறந்து அந்தப் பாதாள அறையின் விளக்குகளைப் போட்டார் சீதா நீலகண்டன்.

அந்தக் குளிர்ப் பதன அறையின் மஞ்சள் விளக்கொளியில் உயர உயரமான, திறந்த இரும்பு அலமாரிகள். அவற்றில் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்த கட்டுக் கட்டான சுவடிகள், சுவடிகள், சுவடிகள்! ஓர் ஓரத்தில் உயரமான மேஜை மீது தலையணை 'சைஸ்' புத்தகங்கள். ஒரு புத்தகத்தின் பழுப்பேறிய பக்கங்களைப் புரட்டினால் ''பிணங்களைப் பாதுகாப்பது எப்படி?'' என்ற தலைப்பு பயமுறுத்தி அவசரம் அவசரமாகப் புத்தகத்தை மூடச் செய்துவிட்டது! இன்னொரு பக்கத்தில் கண்ணாடி கேஸுக்குள் வேலைப்பாடமைந்த எழுத்தாணி, சுவடிகளை ஒன்று போல் வெட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்ட கத்தி போன்ற கருவிகள்.

நாம் எல்லாவற்றையும் அதிசயத்துடன் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்ட சீதா, ''நிதானமாகப் பார்த்துக் கொண்டிருங்கள். கொஞ்சம் வேலையைக் கவனித்துவிட்டு வருகிறேன். எதையும் தொட வேண்டாம்'' என்று எச்சரித்துவிட்டு மேல் தளத்துக்குப் போய்விட்டார்.



• கர்னல் ஆல்காட் சிலை

''நீங்கள் பத்திரிகைக்காரர்களா? நல்ல காலம் கூட்டமாக வரவில்லை. நிறைய பேர் ஒரே சமயத்தில் எங்கள் அறைக்குள் நுழைந்தால் இங்கு வெப்பம் அதிகமாகி எங்களுக்கு ரொம்ப சங்கடமாகிவிடுகிறது'' என்றது ஒரு குரல்.

நாங்கள் திடுக்கிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தோம். யாரையும் காணோம்! ''பிணங்களைப் பாதுகாப்பது எப்படி?'' என்ற நூலைச் சற்று பயத்துடன் பார்த்தோம். கைகால்கள் இலேசாக உதற ஆரம்பித்தன.

சிரிப்புச் சத்தம் கேட்டது. தொடர்ந்து, ''பயம் வேண்டாம். நான்தான் முதல் அலமாரியின் மேல் தட்டில் இருக்கும் சுவடி'' என்று நட்பு கலந்த குரல் ஒலித்தது. சற்று தைரியமடைந்து நாங்களும் உரையாடத் தொடங்கினோம்.

''சரித்திரச் சின்னங்களும் இலக்கியச் செல்வங்களுமான நீங்கள் இவ்வளவு பாதுகாப்புடன், 'சௌக்கியமாக இருப்பதைப்



• சுவடிகள்; எழுத்தாணிகள்

பார்க்கவே சந்தோஷமாக இருக்கிறது."

"ஆமாம். ஆமாம். இங்கு வந்ததிலிருந்து எங்களுக்குக் குறையே இல்லாமல் பார்த்துக் கொள்கின்றனர் இந்தநூலகத்தினர். அவ்வப்போது எங்களைக் கவனித்துதுடைத்து, எண்ணெய் தடவி, இந்தக் குளிர் பதன அறையில் பத்திரப்படுத்தி வைக்கின்றனர். அதனால் எங்கள் மேல் தூசி படியாமல் இருப்பதோடு பூச்சி பொட்டுகளும் நெருங்குவதில்லை."

"நீங்கள் எல்லோரும் எப்படி இங்கு வந்து சேர்ந்தீர்கள்? எங்கிருந்து வந்தீர்கள்?"

"நாங்கள் ஒவ்வொருத்தரும் இந்தியாவின் மூலை முடுக்கு கிராமங்களில் சிதறிக் கிடந்தோம். கிராமவாசிகளுக்கு எங்கள் அருமை தெரியவில்லை, சிலருக்குத் தெரிந்தாலும் எங்களைக் கட்டிக் காப்பாற்றும் அறிவும் வசதியும் அவர்களுக்கு இல்லை. அதனால் எங்களில் பலர் செல்லுக்கும் கரையானுக்கும் இரையாகத் தொடங்கியிருந்தோம். நூறு வருடங்களுக்கு முன்னால் கர்னல் ஆல்காட் என்பவர்—பிரம்மஞான சபையைத்தொடங்கிய அதே கர்னல் ஆல்காட்தான் — மாட்டு



ஆழ்ந்த அமைதி — கண்காட்சி போல் புத்தகங்கள்

வண்டி கட்டிக் கொண்டு கிராமம் கிராமமாகச் சுற்றி வந்தார். வீடு வீடாகப் போய் எங்களைச் சேகரித்துப் பாதுகாக்க ஆரம்பித்தார். உலகின் பல பகுதிகளிலிருந்தும் எங்கள் சகோதர சகோதரிகளை அவர் இங்கு கொண்டு சேர்த்திருக்கிறார்."

"அப்படியா? உங்கள் சகோதர சகோதரிகள் யார் யார்?"

"செப்புத் தட்டில் எழுதப்பட்ட கருத்துக்கள், மரக் கட்டைகளில் எழுத்துக்களைச் செதுக்கி அவற்றை மையில் தோய்த்து, கையால்தயாரித்தகாகிதத்தில்ஒற்றிஎடுத்துத் தயாரிக்கப்பட்ட பழங்காலத்து நூல்கள் (இவற்றை **Xylograph** என்பர்.) சையாம் நாட்டில் தயாரித்த, தங்க வேலைப்பாடுடன் கூடிய அரக்கு ஏடுகளில் புளியங்கொட்டை எழுத்துக்களால்எழுதப்பட்ட புத்தமத இலக்கியம், ஏராளமான கிரந்த மொழி ஓலைச் சுவடிகள்...."

"அடேயப்பா! ஆதி நாளில் நூல்கள் தயாரிப்பதிலே இத்தனை விதமா?"

"ஆமாம்! அதைத் தவிர ஏகப்பட்ட புத்தகங்களும் உண்டு. மிகப் பழைய புத்தகங்களின் முதல் பதிப்புகளும் கையெழுத்துப் பிரதிகளும்கூட எங்களுடன் சேர்ந்து வாழ்கின்றன. சில அபூர்வ புத்தகங்களைப் பார்த்தால் அயர்ந்து விடுவீர்கள். கட்டை விரல் நகத்தளவிற்கு ஒரு புத்தகம். **The Lord's Prayer** என்ற கிறிஸ்தவப் பிரார்த்தனையை ஏழு மொழிகளில் தருகிறது இப்புத்தகம்."

"அதை எப்படிப் படிப்பதாம்?"

"ஒரு பூதக் கண்ணாடியின் கீழ் வைத்துப் படிக்கலாமே! அதோடு அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட குரானும், வாரன் ஹேஸ்டிங்ஸின் முன்னுரையுடன் 1784—இல் வெளியான பகவத் கீதையும் கூட இங்கே உள்ளன!"

பொங்கிய எங்களது ஆச்சரியம் தணிவதற்குள் இன்னொரு மூலையிலிருந்து இனிய குரலில் ஒரு சுவடி பேசியது: "திபேத்திய **Xylograph** பற்றி ஒரு சுவையான செய்தி சொல்கிறேன். அந்த நூல் ஒரு மிகப் பழைய சம்ஸ்கிருத நூலின் மொழி பெயர்ப்பு என்று தெரிந்து இப்போது இந்த நூலகத்தினர் அதை மீண்டும் திபேத்திய மொழியிலிருந்து சமஸ்கிருதத்துக்கு மொழி பெயர்த்துள்ளனர்! மூல சமஸ்கிருத நூல் கிடைக்காத குறையை இப்படித் தீர்த்து வைத்துள்ளனர்."

"அவ்வளவு பாண்டித்யம் பெற்றவர்களா உங்கள் நூலகத்தினர்?"

"இதற்கே இப்படிச் சொல்கிறீர்கள்... துருக்கிய, அராபிய, பெர்ஷிய, லத்தீன், ஜெர்மானிய, இத்தாலிய, ஃபிரெஞ்ச் மற்றும் போலிஷ் மொழிகளுக்கு ஓர் அகராதி இருக்கிறது! இதில் கிழக்கத்திய மொழிகளின் இலக்கணக் குறிப்புக்கள் வேறே! இந்த நூலகத்தில் உள்ள அந்த அகராதியைத் தொகுத்தவர்களின் பாண்டித்யத்தையும் பொறுமையையும் என்னவென்பது?" என்றது மூன்றாவதாக ஒரு குரல்.

நாங்கள் அசந்து போய்விட்டதை உணர்ந்து இன்னும் சில சுவடிகள் துணிச்சலுடன் பேசலாயின: "சில நவீன வசதிகள் இருந்தால் எங்களுக்கும் எங்களைப் பராமரிப்பவர்களுக்கும் எவ்வளவோ சௌகரியமாய் இருக்கும். அதற்கெல்லாம் நிறையப் பணம் தேவைப்படும்...."

"உங்கள் கட்டடத்தையும் அதன் அப்பழுக்கற்ற பராமரிப்பையும் உங்கள் எல்லோரது நல்ல நிலைமையையும் பார்த்தால் நிதி உதவி குறைவாக இருப்பது போலத் தெரியவில்லையே?"

"அதற்குக் காரணம் எங்களுக்கு அன்புடன் சேவை புரிந்து வரும் தன்னலம் கருதாத சிப்பந்திகள்தான். முக்கால்வாசிப் பேர் சம்பளம் வாங்காத ஊழியர்கள்; பண்டிதர்கள் எல்லோருமே ஓய்வு பெற்ற வயோதிகர்கள்; இவர்களுக்கும் சரி, இன்னும் சில ஊழியர்களுக்கும் சரி, மாதம் முந்நூறு ரூபாய்க்கு மேல் சம்பளம் கிடையாது. இவ்வளவு குறை

# தரம் மிக்க
# சாலிடர் டெலிவிஷனை
ஒப்பற்ற
# பிரத்தியேக விற்பனையாளரிடம்
# நிகரற்ற விலையில்
ரொக்கத்திற்கோ/தவணையிலோ
தனித்தோ/கூட்டாகவோ பெற்று
# ஈடில்லா பயனடைவீர்!




# ZENITH Electronics
175, ராமகிருஷ்ணா மடம் சாலை, சென்னை-600 028.
(மந்தைவெளி பஸ் நிலையம் அருகில்)
போன்:72740 (ஷோரூம்) 431465 (வீடு)

வான சம்பளத்துக்காக இங்குள்ள எல்லோரும் ஏன் உயிரைக் கொடுத்து வேலை செய்கிறார்கள் என்று நினைக்கிறீர்கள்? அவர்களுக்கு அறிவாற்றலிடம் உள்ள மதிப்பு, புத்தகங்களிடத்தில் உள்ள அன்பு இவைதாம் காரணம்."

"நமது அரசாங்கம் உங்களுக்கு நிதியுதவி செய்வதில்லையா?"

"தமிழக அரசின் சிபாரிசின் பேரில் மத்திய அரசு, கொஞ்சம் நிதி ஒதுக்கீடு செய்கிறது. அந்தத் தொகை ஆராய்ச்சியாளர்களுக்காக விரிவான பட்டியல்களைத் தயாரித்து வெளியிட மட்டுமே போதுமானது. அதற்கு மட்டுமே பிரத்தியேகமாகத் தரப்படுகிறது. பிரம்ம ஞான சபை உறுப்பினர்கள் உலகின் பல பகுதிகளிலுமிருந்து அனுப்பும் நன்கொடைகள் ஓரளவு உதவுகின்றன. ஆனால் இவை போதவில்லை. அத்தியாவசியமான சில அடிப்படை வசதிகளைக்கூட நாங்கள் இன்னும் அடைய முடியவில்லை."

"தனியார் நிறுவனங்கள் எதுவும் உங்களுக்கு உதவ முன்வரவில்லையா?"

"அதை ஏன் கேட்கிறீர்கள்! அமெரிக்காவிலுள்ள ஃபோர்ட் ஃபவுண்டேஷன் ஒரு பெரிய தொகையை அளிக்க முன் வந்தது. ஆனால் அரசாங்கம் இடைபுகுந்து ஒரு பெரும் தொகையை ஒரே நூலகத்துக்குத் தரக் கூடாது என்று பல பேருக்கு அதைப் பிரித்துக் கொடுத்துவிட்டது! இப்படி எங்கேயாவது உண்டா? முழுதும் எங்களுக்குக் கிடைத்திருந்தால் இந்த ஒரு நூலகமாவது அதி நவீனமடைந்திருக்கும். பலருக்கும் பிரித்து அளிக்கப்பட்டதில் யாருக்குமே பிரயோஜனமில்லாமல் போய்விட்டது. ஆனால் ஒன்று, முன்பு நாங்கள் இருந்த நிலைக்கு இப்போது எவ்வளவோ தேவலாம்!"

"நூற்றாண்டுகளாக உங்களையெல்லாம் காப்பாற்றி எதிர் காலத் தலைமுறைக்கு உங்களைப் பாதுகாத்துத் தந்துள்ளது பெரிய சாதனைதான்."

"அந்தச் சாதனையாளர் பட்டியலில் கர்னல் ஆல்காட்டின் பெயர் தொடங்கி இன்று இங்கே பணியாற்றும் சீதா நீலகண்டன், டாக்டர் ராஜா போன்றோரது பெயர்கள் வரை பல பெயர்கள் உண்டு. அவர்களில் பலர் பிரம்ம ஞான சபை உறுப்பினர்கள். நூலகமே சபையின் ஓர் அங்கம்தானே."

"அப்படியானால் 'இங்கே வருவோரும், பிரம்ம ஞானத்தை நாடி வரும் ஆராய்ச்சியாளர்கள்தானா?"

"ஆராய்ச்சியாளர்கள் மட்டுமல்ல; ஆசைக்காகப் படிப்பவர்களும் வருவார்கள். ஆனால் ஆழ்ந்த அறிவைப் பெற விரும்புவோரே வருவார்கள். நுனிப்புல் மேய்பவர்களுக்கு இங்கே இடமும் இல்லை, அது போன்ற நூல்களும் இங்கு இல்லை."

"விடை பெறுவதற்கு முன்னால் ஒரு சின்ன சந்தேகம்...." என்று இழுத்தோம்.

"என்ன? என்ன?" என்று ஆர்வமாகக் கேட்டன சுவடிகள்.

"உங்கள் நூலக நுழைவாயிலில் 'சரியாக உடையணிந்து வாருங்கள்' என்று ஓர் அறிவிப்பு வைத்திருக்கிறார்களே..."

'கொல்'லென்ற சிரிப்பொலியைத் தொடர்ந்து ஒரு சீனியர் சுவடி சொல்லிற்று: "அதுவா? இங்கே வரும் சில அயல் நாட்டவர் 'பிகினி'யுடன் கடற்கரைக்குப் போய்விட்டு அப்படியே இங்கே வந்துவிடுகிறார்கள். அவர்களுக்காகத்தான் அந்த அறிவிப்பு!"

மீண்டும் எழுந்த கலகல சிரிப்புடன் நாங்களும் கலந்து கொண்டோம். மகிழ்ச்சியுடனும் நிறைவுடனும் விடை பெற்றோம்.

**நமது நிருபர்கள்**

மேலட்டை வண்ணப்படத்தில் சமூகவியல் மாணவி:

**அனன்யா ஸ்ரீராம்**

வண்ணப்படம்; புகைப்படங்கள்: **உத்ரா**

**அடுத்த இதழில்...**

# கொள்ளை போகும் கோயில் சொத்துக்கள்!

**— நெடுமாறன் அம்பலப்படுத்துகிறார்!**



மன மகிழ்ச்சி
அறிவின் வளர்ச்சி
பண்பாட்டின் மலர்ச்சி
மூன்றையும் உங்கள் குழந்தையிடம் காண



# கோகுலம்

## வாங்கிக் கொடுங்கள்

**பிப்ரவரி இதழில்:**

16 பக்க வண்ணப்படக் கதை
பஞ்சஜனனை வென்ற மாயக்கண்ணன்





வருங்கால கிரிக்கெட்
வீரர்களுக்கு
ஒரு போட்டி!

என் குழந்தைப் பருவம்:
தசாவதானி பெ. இராமையா.



ஜெர்மன் தேசக் கதை:
மூன்று அரசகுமாரர்கள்.

இப்பிலி ராஜாவும்
பறக்கும் கோப்பையும்!
— வான்முகில்

• கோகுலம் தம்பி தங்கைகள் எழுதிய பிருந்தாவனக் கதைகள், கவிதைகள், துணுக்குகள் • மற்றும் படிக்கப் படிக்க ஆர்வமூட்டும் அறிவியல் கட்டுரைகள், படக்கதைகள், சிரிப்பு வெடிகள்!

தில்லித் தமிழ்ச் சங்கம்—
ஸ்ரீராம் டிரஸ்ட் (அமுதசுரபி வெளியீட்டாளர்கள்)
இணைந்து நடத்தும்
நூல் வெளியீட்டு விழா

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி
சுவாமிகள் அருளிய

# அமுதமொழி

(ஸ்ரீராம் டிரஸ்டின் முதல் வெளியீடு)

நாள்: 1.2.1987 ஞாயிறு மாலை 4.15 மணி

இடம்: புதுதில்லி தான்சேன் மார்க்கிலுள்ள
FICCI கலை அரங்கு.

நூல் வெளியிடுபவர்: பாரத துணை ஜனாதிபதி

**மேதகு ஆர். வெங்கட்ராமன் அவர்கள்**

முதல் பிரதி பெறுபவர்: திரு எஸ். சத்தியமூர்த்தி, I.A.&A.S.
மற்றும் திருமதி கோமளா வரதன், திரு ஆனந்தம்
கிருஷ்ணமூர்த்தி, டாக்டர் விக்கிரமன் ('அமுதசுரபி' ஆசிரியர்),
திரு என். வி. சுப்ரமண்யம், சீ:ப் ஆப்பரேடிங்
சூப்பரின்டெண்டன்ட், தென்னக ரயில்வே
நூலின் சிறப்பை எடுத்துரைப்பார்கள்.

மாலை 5.45க்கு இன்னிசை.

புது தில்லி அன்பர்கள் அனைவரும் விழாவில்
கலந்துகொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.

ஏ. வி. எஸ். ராஜா,
அமுதசுரபி பதிப்பாளர்,
ஸ்ரீராம் குரூப் நிறுவனங்களின்
வைஸ் சேர்மன் & பிரசிடெண்ட்.

எஸ். ராமாமிருதம்,
தலைவர்
பி. ஆர். வெங்கடகிரி
செயலாளர்
தில்லித் தமிழ்ச் சங்கம்.

ADWAVE/ST/3268



எம். எல். ஏ.: மாலையில் என்னை டிஸ்மிஸ் பண்ணப் போகிறார் என்பது தெரிய வந்ததும் காலையிலேயே மந்திரி பதவியை இராஜினாமா பண்ணிவிட்டேனே... இதிலிருந்தே தெரியவில்லையா...? எனக்குப் பதவி மோகம் கிடையாது என்பது...?

— 'கரடிகுளம் ஜெயபாரதிப்ரியா.

அவர்: அந்தத் திருடனைக் கையும் களவுமாப் பிடிச்சவங்ககிட்ட கேஸை மட்டும் எழுதி வாங்கிக்கிட்டு ஆளை வெளியே அனுப்பிவிட்டீங்களே, ஏன்?

இன்ஸ்பெக்டர்: அதுவா, போனதரம் அவனை ரெண்டு நாள் லாக்கப்பில் அடைச்சிருந்த போது ஸ்டேஷனிலிருந்த ரெண்டு ஃபானையும் ஒரு குடத்தையும் காணோம்!

— லஞ்ஜனு





"உங்க பையன் சிரித்து நான் பார்த்ததேகிடையாது! என்ன பண்ணிக்கிட்டு இருக்கான்?"

"பத்திரிகைகள்ல ஜோக் எழுதுறான்!"

— மணியன் தர்மலிங்கம்.

"சாராயக் கடைக்காரரைக் கல்யாணம் பண்ணிக்கிட்டது தப்பாப் போச்சு."

"ஏன்...?"

"மல்லிகா என்கிற பெயரை மில்லிகா மில்லிகான்னு கூப்பிடறார்!"

— சந்தி. கமலேஸ்வரன்.

அவன்: என்ன அந்தத் தியேட்டரைச் சுத்தி ஒரே புழுதிப் படலம்?

இவன்: தெரியாதா? படம் தூள் கிளப்புகிறதாம்!

— லஞ்ஜனு

'காட்ஸு' என்றசக்கரவர்த்திசீனாவை ஆண்டபோது சின் கூய் என்பவன் அவரிடம் மந்திரியாக இருந்தான்.

சின் கூய் எதிரிகளிடம் தாய்நாட்டைக் காட்டிக் கொடுத்தவன்.

அவனிடம்தங்களுக்குள்ள வெறுப்பை வெளிப்படுத்துகின்ற முறையில் எச்சில் துப்பும் தொட்டிக்கு 'சின்கூய்' என்று அவனுடைய பெயரை வைத்து அழைக்கின்றனர், சீன மக்கள்.

சென்றஎட்டுநூற்றாண்டுகளாகமக்கள் காரித் துப்பி அவனை அவமானப்படுத்தி வருகின்றனர்!

— எஸ். முகம்மது யூசுப்


இந்த 'பைப்'பை ஒண்ணு புகையுங்க! இளமை திரும்பும்!
இந்தக் கறுப்புக் கண்ணாடி போடுங்க!.. 'குறு குறு'ன்னு பார்வை தெளிவா தெரியும்!
அதை எடுத்து உங்க பாக்கெட்லே வெச்சுக்குங்க!.. சமயத்துக்கு உதவும்!
ராஜினாமா
கோப்புலே நீங்க எழுதியிருக்கிற சினிமா கதை ரொம்பப் பிரமாதம்! வசனம் அதைவிட ரொம்ப ரொம்பப் பிரமாதம்!.. ஸார், ஸார்.. அப்படியே எனக்கு ஒரு பாட்டு எழுத சான்ஸ்..
தமிழக முதல்வர் திரைக் கதை வசனம் எழுதுவார்— செய்தி
URGENT




# கல்கி

1987 பிப்ரவரி 1
மலர் 45 இதழ் 27
அக்ஷய தை 19




# எம். ஜி. ஆர். எழுதும் சினிமாக் கதை!

ஒரு கதையை சினிமா எடுப்பதற்கும் சினிமாவுக்கென்று கதை எழுதுவதற்கும் வித்தியாசம் உண்டு. சினிமாவில் இன்னின்ன உணர்ச்சிகள் இடம்பெற வேண்டும் என்று தீர்மானித்து அதற்கேற்பக் கதை எழுதப்படும். சினிமாவுக்குக் கதை எழுதப் போவதாக அறிவித்துள்ள எம். ஜி. ஆருக்கு இது தெரியாதது அல்ல. பார்க்கப் போனால் அவர் தமிழக அரசியலையே ஒரு சினிமாக் கதையாகத்தான் எழுதி வருகிறார்!

உதாரணமாக கான்ஃப்ளிக்ட் என்ற உள்மனப் போராட்டம் சினிமாவுக்கு அவசியம். 'ஜி. பி. போய் விட்டாரே. இங்கே மோகன்தாஸைப் பதவி மாற்றம் செய்வதா வேண்டாமா?' என்றும் 'முன்பு அவரிடமிருந்து பறிக்கப்பட்ட பதவியைத் திரும்பத் தந்தோமே, இப்போது மறுபடி பறிப்பதா?' என்றும் எம். ஜி. ஆர். மனத்தில் ஒரு போராட்டம் நிகழாமலா இருக்கும்? எப்படி அற்புதமான முறையில் கான்ஃப்ளிக்டை உணர்த்துகிறார் பாருங்கள்!

மெலோ டிராமா என்று ஓர் அம்சம் திரைக்கதைக்கு முக்கியம் என்பது சினிமா உலகில் லைட்பாய்க்குக் கூடத் தெரியும். எம். ஜி. ஆருக்கா தெரியாது? எம். ஜி. ஆர். அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வந்த போது இங்கே ஜெயலலிதா படுத்தி வைத்த பாடு இருக்கிறதே, அதைவிடச் சிறந்த மெலோ டிராமா எந்தச் சினிமாவில் கிடைக்கும்? அதுபற்றி எம். ஜி. ஆருக்கு இன்னும் ஏதாவது விவரம் தெரிய வேணுமானால் திருநாவுக்கரசைக் கேட்டுக் கொள்ளலாம்!

அப்புறம் ஸஸ்பென்ஸ்! 'அந்தப் பதினொரு மந்திரிகள் யார்?' என்று நம்மைச் சிண்டைப் பிய்த்துக் கொள்ள வைத்தாரே முதல்வர்! ஸஸ்பென்ஸ் என்றால் அதுவல்லவா ஸஸ்பென்ஸ்!

ஸூம் லென்ஸ் போட்டு எடுப்பது ஒரு டெக்னிக். எங்கோ, தொலைதூரத்தில் குதிரைகள் பாய்ந்து வருவதை வெகு அருகில் உள்ளது போல் காட்டுவார்கள். அதையே ஸ்லோமோஷனில் படம் பிடித்தால் எஃபெக்ட் இன்னும் அதிகமாக இருக்கும். இந்த டெக்னிக்தான் கிருஷ்ணா நதிநீர்த் திட்டத்தில் கையாளப்படுகிறது. இதோ பக்கத்தில் வந்து விட்டது போல் தோன்றும்; ஆனால் வராது; தொலைவில்தான் இருக்கும்!

கனவுக் காட்சி இல்லாத, எம். ஜி. ஆர். நடித்த சினிமா ஏது? வண்ணமயமான பல்புகள் ஆயிரக்கணக்கில் எரிந்து ஒளி சிந்துகின்றன. ஒளிமயமான எதிர்காலத்தில் தமிழகம் பிரகாசிக்கிறது. பவர்கட் என்பதே கிடையாது! குழாயைத் திருப்பினால் தண்ணீர் அருவியாய்க் கொட்டுகிறது! குடிநீர்த் தட்டுப்பாடே இல்லை! எங்கும் நிலவும் சுபிட்சத்தில் மக்கள் திளைத்துக் களிப்புடன் குரூப் டான்ஸ் ஆடுகிறார்கள்! கனவுக் காட்சியிலன்றி இதை வேறு எப்படிக் காட்ட முடியும்?

ஃப்ளாஷ் பாக் இன்றியமையாதது. தேர்தலின்போது முதல்வர் சிகிச்சைக்காக அமெரிக்காவில் இருக்க, கிராமம் கிராமமாக வீடியோவில் அவர் நடித்த சினிமாக்களைப் போட்டுக் காட்டினார்களே, இப்போதும் டி. வி. யில் அடிக்கடி எம். ஜி. ஆர். சினிமா காட்டி வருகிறார்களே, பாமர மக்களின் வோட்டுக்களைக் கவர இதைவிடச் சிறந்த ஃப்ளாஷ் பாக் யுக்தி வேறு என்ன இருக்க முடியும்?

காமெடி டிராக் இல்லாத சினிமாவா? மதுவிலக்கு இருக்கிறதா இல்லையா என்றே புரியாத ஒரு விசித்திர நிலையானது எத்தனை விதமான காமெடி ஸிச்சுவேஷன்களுக்கு இடமளிக்கும் என்று யோசித்துப் பார்க்கும் போது சிரிப்புப் பொத்துக் கொண்டுதான் வருகிறது! கள்ளச் சாராயம் காய்ச்சும் வில்லனைப் பிடிக்கக் கிளம்பும் மதுவிலக்கு அதிகாரியாக நடிக்கும் லூஸ் மோகன், தைரியம் பெற, பாக்கெட்டுக்குள்ளிருந்து ஒரு விஸ்கி பாட்டிலை எடுத்து, சட்டபூர்வமாக ஒரு மடக்கு அருந்திவிட்டு, 'டக், டக்'கென்று நடந்து போனால் அது எப்பேற்பட்ட நகைச்சுவைக் காட்சியாக இருக்கும்!

எமோஷனல் டர்னிங் பாயின்ட் என்பதும் திரைக்கதைக்கு அத்தியாவசியம் என்பதற்காகத்தான் எஸ். டி. எஸ். கோபித்துக் கொண்டு வெளியேறினார். பின்னர் அபௌட்டர்ன் செய்து திரும்பி வந்து சேர்ந்தார். எம். ஜி. ஆரும் சகோதர வாஞ்சையுடன் கட்டிப் பிடித்து ஏற்றுக் கொண்டார். நமக்குத் தெரியாதா என்ன!

திரைக்கதைக்குத் தேவையான வேறு பல சிறப்பு அம்சங்களையும் எம். ஜி. ஆர். அரசியலில் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து கொண்டுதான் இருக்கிறோம். ஆனால் கிளைமாக்ஸ் என்ன என்பதை அவர் தீர்மானம் செய்துவிட்டாரா என்று மட்டும் தெரியவில்லை. நம்மைக் கேட்டால், ஜானகிக்குக் கட்சிக் காரியதரிசி பதவியும் ஜெயலலிதாவுக்கு மந்திரி பதவியும் கொடுத்துக் கதையைச் சுபமாக முடித்துவிடலாம். மக்கள் மனநிறைவோடும் மகிழ்ச்சியோடும் உறக்கத்தைத் தொடர்வார்கள்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.



* வாழ்த்துவோம்!

* என். வீரவேல், கோபாலசமுத்திரம் *

? அடிக்கடி அரசு ஊழியர்களுக்கு வழங்கும் சம்பள உயர்வுகள் சலுகைகள் ஆரோக்கிய மானதா?

! விலைவாசி உயர, ஊதிய உயர்வு கோருவதைத் தவறு என்று கூற முடியாது. ஆனால் விலைவாசி உயர்வால் சம்பள உயர்வு, சம்பள உயர்வால் விலைவாசி உயர்வு என்ற ஒரு விஷ வட்டத்தை முறிக்க ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. அது, சம்பள உயர்வை மட்டும் நிர்ணயிக்காமல் அரசுத் துறை, தனியார் துறை, அரசு அலுவலகங்கள் ஆகிய அனைத்திலுமே உற்பத்திப் பெருக்குடன் அல்லது செயல் திறனுடன் ஊதிய உயர்வை முடிச்சுப் போடுவதுதான். ஆனால் லாபம் இருக்கிறதோ இல்லையோ, ஒரு மாத போனஸ் கொடுத்தாக வேண்டும் என்று, போனஸ் என்ற சொல்லின் அர்த்தத்தையே மாற்றி, பதின்மூன்று மாத சம்பளத்துக்கு வழி வகுத்த அரசிடம் இதையெல்லாம் எதிர்பார்க்க முடியாது. இவர்களுடைய பொருளாதாரக் கொள்கையே அலாதி; அது வோட்டுப் பெறுவது, பதவியைக் காப்பாற்றிக் கொள்வது என்ற அடிப்படையில் அமைந்தது. நாட்டின் பொருளாதாரம் எக்கேடு கெட்டால் என்ன!

* பானு அசோக், திருச்சி

? ஆயிரம் படங்களில் நடித்து முடித்துள்ள மனோரமா பற்றி....?

! ஆயிரம் படங்களில் நடித்த சாதனையை விட அத்தனை படங்கள் மூலம் லட்சோப லட்சம் மக்களைக் கவலைகளை மறந்து சிரிக்க வைத்தது மகத்தான காரியம். மனிதனை மிருகங்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவதே இந்த நகைச்சுவை உணர்வுதானே. அதனைத் தூண்டிவிட்டு, ஆரோக்கியத்துக்கு வழி வகுத்த மனோரமாவுக்கு நன்றியில் நனைந்த கண்களுடன் வாழ்த்துக் கூறுவோம்.

* ஆ. பாலாஜிகுமார், நீடாமங்கலம்

? 'தனிப்பட்டவர்களின் தபால்களைப் பிரித்துப் பார்ப்பது தவறு' என்று கூறி, பாராளுமன்றம் அங்கீகரித்த மசோதாவை ஜனாதிபதி நிராகரித்து விட்டது பற்றி...?

! ஜனாதிபதி 'தவறு' என்று கூறவுமில்லை; நிராகரிக்கவும் இல்லை. அந்த அளவுக்குத் தைரியம் அவருக்கு வருமா என்பது சந்தேகமே. சில விளக்கங்களைக் கேட்டிருக்கிறார், அவ்வளவே. ஜனாதிபதி நிராகரித்தாலும் நாடாளுமன்றம் மீண்டும் அவருக்கு அதே மசோதாவை அங்கீகரித்து அனுப்ப முடியும். மூன்றாவது முறை அனுப்பப்படும் போது அவர் கையெழுத்துப் போட்டே ஆக வேண்டும். நிற்க. தனியார் தபால்களைத் தேசப் பாதுகாப்பு கருதிப் பிரித்துப் பார்க்க இப்போதே அரசுக்குச் சில அதிகாரங்கள் உள்ளன. இதற்கு மேலும் விரிவான அதி-

* சோகமிசம்!

* பாதை வகுத்தவர்



காரங்களைக் கோரி, சட்ட பூர்வமாக்கப் பார்ப்பது மக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதிப்பதாகும். ஜனநாயக விரோதச் செயல்.

* த. சத்தியநாராயணன், அயன்புரம்

? என்டிஆர். மீண்டும் சினிமாவில் நடிப்பது எதைக் காட்டுகிறது?

! தேர்தல் ஜுரம் வந்துவிட்டது என்பதைத் தான். தேர்தலுக்குப் பணம் வேண்டும்; பிராபல்யமும் வேண்டும். இரண்டையும் ஒரே சமயத்தில் அடைய வழி சினிமா. தொழில்—வர்த்தக அதிபர்களிடம் நன்கொடை பெற்று, பிறகு அவர்களுக்குச் சலுகை காட்டுவதைவிட, சினிமாவில் நடித்துச் சம்பாதிப்பது மேலானதுதான். ஆனால் முதல்வர் பதவியில் மக்களால் அமர்த்தப்பட்டிருக்கும் ஒருவர், வேறு ஒரு லாபம் சம்பாதிக்கும் காரியத்தில் இறங்கி, கவனத்தைச் சிதற விடுவது சட்டபூர்வமாகவே ஆட்சேபணைக்குரியது. இந்த ஆட்சேபணை நீதிமன்றப் பரிசீலனைக்கும் போய்விட்டது.

* எச்.கே. நாசர், தோப்புத்துறை

? பிரணப் முகர்ஜியின் தலைமையில்

அமைந்த தேசிய சோஷலிஸ காங்கிரஸ் பற்றி....?

! ஜனநாயகத்தில் ஒரு பிரதமர் போய்ப் புதிய பிரதமர் வரும்போது சிலருக்குப் பதவி பறி போவதும் சிலர் புதிதாகத் தலையெடுப்பதும் இயல்பு. பதவி பறிக்கப்பட்டவர்கள் அதனை இலேசாக எடுத்துக் கொள்ளாமல் முணுமுணுப்பதும் புதிய கட்சி தொடங்குவதும் பரிதாபம். புதிய கட்சிக்கு 'தேம்பும் சோகலிச காங்கிரஸ்' என்று பெயர் சூட்டியிருந்தால் பொருத்தமாயிருக்கும்.

* கே.வி. நாதன், நெய்வேலி

? பழம் பெரும் நடிகை எஸ்.டி. சுப்புலட்சுமி மறைவு குறித்து?

! டைரக்டர் கே. சுப்பிரமணியத்தின் இரு மனைவியரும் அடுத்தடுத்து ஒரு நாள் இடைவெளியில் இறந்து போனது ஓர் ஆச்சர்யம் என்பது ஒருபுறமிருக்க, திரை உலகில் இத்தனை வசதிகள், டெக்னிகல் நுணுக்கங்கள் வளராத காலகட்டத்தில் அவர்களுடைய சாதனைகள் மகத்தானவை. தடை செய்யப்படலாம், நஷ்டமடைய நேரலாம் என்பது தெரிந்திருந்தும் தேசிய நோக்கில் 'தியாக பூமி' போன்ற படங்களை எடுக்கவும் அதில் நடிக்கவும் அவர்களுக்குத் துணிவு இருந்தது. பொழுதுபோக்குக்காக மட்டுமின்றிச் சமுதாயப் பார்வையிலும்,மூட நம்பிக்கைகளை எதிர்த்துப் படமெடுத்து வழிகாட்டிகளாக விளங்கினார்கள். டைரக்டர் கே. சுப்பிரமணியத்தின் முதல் மனைவி மீனாக்ஷி, பல திரைப் பாடல்களுக்கு மட்டுமின்றித் திரைப்படங்களுக்கும் (rerecording) இசை அமைத்துப் புகழ் பெற்றவர்.

* ஆர். கே. அருள்செல்வன்,
விக்கிரபாண்டியம்

? சமீபத்தில் ரசித்துப் படித்தது எது?

! சிறு தொழில் தொடங்கியிருப்பவர்கள் அல்லது தொடங்க நினைப்பவர்கள் அவசியம் படித்துப் பார்த்துப் பயன் பெற வேண்டிய ஆங்கில நூல் **Primer for small scale industrialists.** உண்மையைச் சொல்வதென்றால் இந்தப் புத்தகம் என் பார்வைக்கு வந்த

## நீங்கள் கேட்டவை — தராசு

பிறகும் பல நாட்கள் அதைப் புரட்டிப் பாராமலே அசுவாரஸ்யமாக இருந்தேன். ஆனால் ஹிந்துவில் வந்த விமர்சனத்தில், 'சிறு தொழில் அதிபர்கள் மட்டுமின்றி எல்லாருமே ரசிக்கும்படி எழுதப்பட்டிருக்கிறது' என்ற வரிகளைப் பார்த்த பிறகு படிக்க ஆரம்பித்து, அது உண்மையான பாராட்டு என்று உணர்ந்தேன். இதற்கு முக்கிய காரணம், நூலாசிரியர், புள்ளி விவரங்கள், விதிமுறைகளைப் பற்றி மட்டும் எழுதாமல், மன இயல்புகளையும் ஆங்காங்கே அலசியிருப்பதுதான். நமது நாட்டின் மொத்தத்

* தேர்தல் ஜுரம்

# ஆயிரம் படங்களில் நடித்துள்ள மனோரமா பற்றி...?



தொழில் உற்பத்தியில் ஐம்பது சதம் சிறு தொழில் அமைப்புக்களிலேயே உருவாகிறது; ஏற்றுமதியில் இருபது சதம் பங்கு சிறு தொழில் அமைப்புக்களுக்கே உரியது என்னும்போது இந்த நூலின் முக்கியத்துவம் புரியும். ஆசிரியர்: எம்.ஜி. பாலசுப்பிரமணியம், ஐ.ஏ.எஸ். (ரிடையர்டு). கிடைக்குமிடம்: ஸ்ரீ சந்திரா புக் சென்டர், ஆர்த்தி ஆர்கேட், 86, டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை, சென்னை — 600 004.

* கலைஞர் பிரியா, வேலூர்

? 'கர்நாடகத்தில் என் பணி முடிந்து விட்டது; இனி தேசிய அரசியலில் ஈடுபடுவேன்' என்கிறாரே ஹெக்டே?

! மாநில அளவில் அவர் ஆற்றல் நல்ல மகசூலைத் தந்து கொண்டிருக்கிறது. தேசிய அரசியலில் விழலுக்கு இறைத்த நீராகிவிடும் — இன்றையச் சூழலில்.

* ரூ 10 பரிசு பெறுபவர்:
என். வீரவேல்,
கோபாலசமுத்திரம்,
புத்தூர் அஞ்சல்,
சீர்காழி வட்டம், 609 108.

# ஸ்ரீ ராகு பகவான் கோடி அர்ச்சனை

## அ/மி. நாகநாதசுவாமி திருக்கோயில்,
## திருநாகேஸ்வரம் — 612 204, கும்பகோணம் வட்டம்.

கும்பகோணம் வட்டம், திருநாகேஸ்வரம் ஸ்ரீ நாகநாத சுவாமி கோவிலில் ஸ்ரீ ராகு பகவான் தன் இரு தேவியருடன் தனிச் சன்னதிக் கொண்டு எழுந்தருளி அருள் பாலித்து வருகிறார். ஸ்ரீ ராகு பகவான் பூஜித்துச் சிறப்பு பெற்ற இத்தலம் ராகு தோஷம், திருமண தோஷம், காலசர்ப்ப தோஷம், புத்திர தோஷம் போன்றவற்றை நிவர்த்தி செய்து தனிச் சிறப்பு பெற்று விளங்கி வருகிறது. இப்பெருமானுக்குப் பால் அபிஷேகம் செய்தால்,

### ...பால் நீல நிறமாவதை...

பக்தர்கள் நேரில் வந்து பார்க்கும் அற்புதமாகும். நாட்டில் பல பாகங்களில் இருந்தும் பக்தர்கள் ராகு தோஷம் நிவர்த்திக்கு வந்து பால் அபிஷேகம் செய்து பலன் பெறுகிறார்கள். உலக நன்மைக்காகவும், ஸ்ரீ ராகு பகவானுடைய அருளை வேண்டியும், அவர் இருவருடன் ஸ்ரீ ராகு பகவானுக்கு 27.7.86 முதல் கோடி அர்ச்சனை துவங்கி நடைபெற்று வருகின்றது. 25.12.86 அன்று 27 லட்சம் முடிந்து பிரதி தினமும் மாலை 6 மணிக்குத் தொடங்கி கோடி அர்ச்சனை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. தாங்களும் கோடி அர்ச்சனையில் கலந்து கொண்டு ஸ்ரீ ராகு பகவான் பேரருளைப் பெற வேண்டுகிறோம்.

1. கோடி அர்ச்சனைக்கு 1 க்குக் கட்டணம் ரூ. 25/—
2. பால் அபிஷேகம் செய்யக் கட்டணம் ரூ. 50/—

கோடி அர்ச்சனை செய்ய விரும்புவோர் ரூ. 25/— எம். ஓ. அனுப்பி பெயர், நட்சத்திரம், கோத்திரம், முகவரி அனுப்பவும்.

கட்டணம் அனுப்ப முகவரி:
செயலாளர் & பொருளாளர்,
ஸ்ரீ ராகு பகவான் கோடி அர்ச்சனைக் குழு,
அ/மி. நாகநாத சுவாமி திருக்கோயில்,
திருநாகேஸ்வரம் — 612 204,
கும்பகோணம் வட்டம், தஞ்சை மாவட்டம், தமிழ்நாடு.



"பாரதப் பிரதமரின் சுயவேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் பயனடையுங்கள்"

# தங்க நகை தயாரிப்பாளர்களுக்கான இயந்திரங்கள்


Press Machine


Horizontal Machine


Vertical and Horizontal Combined Machine


Bangle Bending Machine


Sheet and Wire rolling Machine

தங்கத்தில் வளையல், மோதிரம், டாலர், பட்டை மோதிரம், செயின், குப்பா ஸ்டெட், டியூப் செயின், பட்டை செதுக்குவதற்கான மிகச் சிறந்த 'மிஷினை' நாங்கள் குறைந்த விலையில் உத்திரவாதத்துடன் செய்து கொடுக்கிறோம். வெர்டிகல் & ஹாரிசான்டல் கம்பைண்டு கட்டிங் மிஷின், தகடு, கம்பி மிஷின், பெண்டிங் மிஷின், பிரஷ் மிஷின்களை மிகச் சிறந்த முறையில் தயார் செய்து கொடுக்கிறோம். வெளிநாடுகளுக்கும் எங்களுடைய மிஷின்களை ஏற்றுமதி செய்கிறோம். மேலும் எங்களுக்கு சேல்ஸ் ரெப்ரசன்டேடிவ்வோ, சேல்ஸ் ஏஜன்டியோ யாரும் கிடையாது. தேவையானவர்கள் நேரில் தொடர்பு கொள்ளவும்.

தயாரிப்பாளர்கள்: **ஸ்ரீ வெங்கடேசா இண்டஸ்ட்ரீஸ்**

அலுவலகம்: 23/93, உப்பார வீதி, (ராஜ வீதி அருகில்) கோயமுத்தூர் - 641 001. போன்: 25960

# புரிந்துவிட்டது!

தேவராஜுக்குப் பெரிய பிரச்னை ஒன்று விஸ்வரூபமெடுத்துத் தலைவிரித்தாடியது.

விஷயம் இதுதான்:

அவர் குடியிருக்கும் வீட்டுச் சொந்தக்காரர் வீட்டைக் காலி செய்யும்படி நோட்டீஸ் அனுப்பியிருந்தார். சாதாரண சமயமாயிருந்தால் பரவாயில்லை. மகள் வேறு பிரசவத்திற்காக வந்திருக்கிறாள். இப்பொழுது போய் வீடு மாற்றம் செய்து கொண்டிருக்கக் கூடிய சமயமா? இந்த நெருக்கடியினால் மிகவும் குழம்பிப் போயிருந்தார் தேவராஜ். என்ன செய்வது என்றே புரியவில்லை.

வீட்டுக்காரர் தஞ்சாவூரில் இருந்தார். எப்போதாவது நாகப்பட்டினம் வந்தால் இவர்களைப் பார்த்துவிட்டு ஒரு காப்பியோடு குசலம்முடித்துக்கொண்டுகிளம்பிவிடுவார். ரொம்பவும் நல்லவர்தான். ஆனாலும் திடீரென்று மனுஷனுக்கு ஆசை வந்துவிட்டது. இத்தனை விஸ்தாரமான ஒரே வீட்டை இடித்துக் கடைகளுக்கு விடுகிற மாதிரி சின்னச் சின்னதாய்க் கட்டிவிட்டால் வாடகை பல மடங்கு வரும். தேவராஜ் தன் நிலைமையை இரண்டு மூன்று முறை எடுத்துக் கூறிக் கொஞ்சம் அவகாசம் கேட்டும் கூட ஒரே பிடிவாதமாக நோட்டீஸ் அனுப்பி விட்டார் முடிவாக:

''எதற்கும் இன்னொரு தடவை போய்க் கேட்டுப் பாருங்களேன், நம்ம நிலைமையைச் சொல்லி. மசிந்தாலும் மசியலாம்'' இது மனைவியின் நச்சரிப்பு ஆலோசனை.

''எங்க வீட்டுக்காரர் என்னமோ சொல்லத்தான் சொன்னார். 'இங்கே போப்பாவில் இல்லாத சௌகரியமா? கோடியில் இருக்கிற நாகப்பட்டினம் போய்த்தான் பிரசவம் பார்க்கணுமா? வேணுமானா ஒங்கம்மாவை இங்கே வரச் சொல்லு உதவிக்கு!' அப்படின்னார். இங்கே பார்த்தா என்னாலே ஒரே பிரச்னை.''

பெண்ணின் இந்த அங்கலாய்ப்புத்தான் தேவராஜுக்கு விசித்திரமாக இருந்தது.

இந்தப் பெண்கள்தான் திருமணமானவுடன் எப்படி மாறிப் போய் விடுகிறார்கள்! கனத்த மனசுடன் தஞ்சாவூருக்கு பஸ் ஏறினார் தேவராஜ்.

எப்பொழுதுமே சீரியஸாக இருக்கும் வீட்டுக்காரர் வாயெல்லாம் பல்லாகத் தேவராஜை வரவேற்றார்.

''வீட்டு விஷயமாகத்தானே வந்திருக்கீங்க. அதெல்லாம் சாவகாசமாகப் பேசிக்கலாம். உங்க பொண்ணு வேறே பிரசவத்துக்கு வந்திருக்கு. நல்லபடியா பெத்து நல்லதா முடியட்டும்'' என்று சொல்லிக் கொண்டே போன வீட்டுக்காரரை ஆச்சரியமாகப் பார்த்தார் தேவராஜ். உள்ளே போய்க் காப்பியுடன் திரும்பியவரிடம் ''என்ன விஷயம்?'' என்றுவியப்புடன்கேட்டார்தேவராஜ்.

''நேத்து கடுதாசி வந்தது — என் பெண் முழுகாமல் இருக்கிறதா. ஏதோ இப்பவாவது பகவான் கண் திறந்தாரே. எனக்குப் பேரனோ பேத்தியோ பொறந்து தாத்தாவாகப் போகிறேன்,'' என்று குழந்தையாகக் குதூகலித்தார் வீட்டுக்காரர். அவரது மனமாற்றத்தின் காரணம் இப்போது புரிந்துவிட்டது.

— லலிதா துரைசாமி





# “ஒரு தலைமுறையே தவறு செய்துவிட்டது”

**பிரேமா பாண்டுரங்கன் சென்னை, மாநிலக் கல்லூரியின் ஆங்கிலத் துறையில் பேராசிரியையாகப் பணி புரிபவர். ஆங்கிலத்தில் ஹிந்து சமயச் சொற்பொழிவுகள் ஆற்றி வருகிறார். இந்தியாவில் பல, இடங்களில் மட்டும் இன்றி, பல அயல் நாடுகளிலும் உரையாற்றி வருகிறார். இந்தப் பேட்டியில் அவரது உறுதியான லட்சியமும் மன வலிமையும் வெளிப்படுகின்றன.**

கேள்வி: சமீபத்தில் அயல்நாடுகளுக்குச் சென்று திரும்பியுள்ளீர்கள். அங்கெல்லாம் உங்கள் சமயச் சொற்பொழிவுகளுக்கு வரவேற்பு எப்படி இருந்தது?

பதில்: அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் உள்ள சில இந்திய அமைப்புக்களின் அழைப்பை ஏற்று நான் போயிருந்தேன். அங்கு பெரும்பாலும் இந்தியர்கள் அடங்கிய கூட்டங்களில் உரையாற்றினேன். அவர்கள் எல்லோருக்குமே தங்கள் குழந்தைகளைப் பற்றிய கவலைதான். இளைய தலைமுறையின் இந்திய வேர்கள் அறுபட்டு வருகின்றன என்ற அச்சம்தான். அதனால் இந்தியாவைப் பற்றி அறிந்து கொள்ள என்ன வாய்ப்புக் கிடைத்தாலும் அவர்கள் விடுவதில்லை.

கே: நம் நாட்டில் உரையாற்றுவதற்கும் அயல்நாடுகளில் பேசுவதற்கும் இடையே ஏதேனும் வித்தியாசம் உணர்ந்தீர்களா?

ப: அங்கு பேசுவது இந்தியாவில் பேசுவதைக் காட்டிலும் கடினம். கேள்வி கேட்கும் பழக்கத்தை ஊக்குவிக்கும் ஒரு கல்வி முறையில் பயின்ற அவர்கள் எதற்கெடுத்தாலும் சந்தேகங்களை எழுப்புவார்கள். திருப்திகரமான பதில்களைத் தராவிட்டால் விவாதிப்பார்கள். ஆனால் நம்பிக்கை ஏற்பட்டு விட்டால் அவர்கள் காட்டும் தீவிரம் நம்மைப் பிரமிக்க வைக்கும்.

கே: கம்யூனிஸ்ட் நாடுகளுக்குப் போயிருக்கிறீர்களா?

ப: செக்கஸ்லோவாக்கியாவில் ‘ப்ராக்’குக்குப் போயிருந்தேன். அங்கு ஒரு கிறிஸ்தவ மாநாட்டில் இந்து மதம் பற்றி உரையாற்ற

வாய்ப்புக் கிடைத்தது. மதங்கள் பற்றிய விழிப்புணர்வு கம்யூனிஸ்டு நாடுகளிலும் மெல்லத் தோன்றி வருகிறது.

கே: ஓர் ஆங்கிலப் பேராசிரியையாக இருக்கும் நீங்கள் சமயச் சொற்பொழிவுகள் ஆற்றுவதை ஏன் மேற்கொண்டீர்கள்?

ப: நமது வாழ்க்கை முறை, கலைகள், பண்பாடு எல்லாமே மதத்தைச் சுற்றி வளர்ந்தவைதான். ஆனால் இன்றைக்கு இந்திய சமுதாயம் அதையெல்லாம் மறந்துவிட்டு இலக்கின்றி எங்கோ மிதந்து கொண்டிருக்கிறது. நமது கல்வி முறை அந்நியமானது. அது நம் வாழ்க்கை முறையோடு தொடர்புடையதாக இல்லை. இதனால்தான் பல பிரச்னைகள் தோன்றியுள்ளன. வேலையில்லாத் திண்டாட்டம், பொருளாதாரப் பிரச்னைகள், வன்முறை எல்லாவற்றுக்குமே இந்த முட்டாள்தனமான கல்வி முறைதான் அடிப்படைக் காரணம். இந்த நிலைமை மாற வேண்டுமானால் நாம் நமது வேர்களுக்குத் திரும்ப வேண்டும். நமது ஹிந்து மதக் கோட்பாடுகளின்படி வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். இதைத்தான் நான் என்னால் இயன்ற அளவில் எனது சொற்பொழிவுகள் மூலம் உணர்த்தி வருகிறேன்.

கே: உங்களுக்கு நம்பிக்கையில்லாத ஒரு கல்விமுறையின் அங்கமாக ஏன் நீங்கள் தொடர்ந்து இருக்க வேண்டும்?

ப: இருபது ஆண்டுகளாகக் கல்வித்துறையில் பணியாற்றுகிறேன். இங்கே இருப்பதால்தான் அது எவ்வளவு புரையோடிப் போயிருக்கிறது என்பது தெரிகிறது. உடனே இங்கிருந்து நான் வெளியேறி விடுவதால் கல்விமுறையைச் சீர்திருத்தி விட முடியுமா? சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் ஒரு புரட்சிகரமான சீர்திருத்தத்தின் அவசியத்தை எடுத்துச் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறேன். அமைச்சர்கள் அளவிலும், பல்கலைக் கழக சின்டிகேட் அளவிலும் என் கருத்துக்களை வெளிப்படுத்திக் கொண்டுதான் இருக்கிறேன். என் வேலை போய்விடுமோ என்ற பயமெல்லாம் எனக்கில்லை. போனாலும் நான் கவலைப்பட மாட்டேன்.

கே: ஓர் ஆதர்ச கல்விமுறை எது என்று நினைக்கிறீர்கள்?

ப: நமது பண்பாட்டினை மறவாத கல்வி முறைதான். நமது பண்பாடு மதத்தின் அடிப்படையிலானது. அதனால் நம் கல்வி முறையும் மதத்திலிருந்து விலகிப் போய்விடாமல் இருக்க வேண்டும்.

கே: அது கல்வியை ஒரு குறுகிய வட்டத்தில் சிறைப்படுத்துவதாகாதா? மதம் அவரவர் சொந்த விருப்பு வெறுப்பைப் பொறுத்ததில்லையா?

ப: இந்தக் கேள்வி எழக் காரணமே மதத்தைப் பற்றிய தவறான அபிப்ராயம் பரவலாக நிலவுவதால்தான். ஹிந்து மதமும் சரி, இதர மதங்களும் சரி 'அன்பு' என்ற மிக வலிமையான சக்தியை அடிப்படையாகக் கொண்டவை. உண்மையான அன்பின் அடிப்படையிலான எதுவும் எப்படி குறுகிய எல்லைகளுக்குட்பட்டதாக இருக்க முடியும்?

கே: அன்பின் அடிப்படையிலான மதங்களுக்கு இடையே ஏன் இவ்வளவு காழ்ப்புணர்ச்சி? இன்றைக்கு ஏன் இந்தியா மதக் கலவரங்களால் பிளவுபட்டுக் கிடக்கிறது? இந்த நிலைமை மதங்களிடம் நம்பிக்கை இழக்கச் செய்வதாக இருக்கிறதே?

ப: மதத்தை மறந்ததால்தான் இத்தகைய நிலைமையே உருவாயிற்று என்பேன். மதக் கோட்பாடுகளை உள்ளடக்காத ஒரு கல்வி முறையில் பயின்று வந்த தலைமுறையினர்தான் வேற்றுமைகளைக் கற்பித்து விரிசல்களை ஏற்படுத்தி வருகின்றனர். கல்விமுறையில் கிடைக்காத ஊட்டச் சத்தை பெற்றோர்களாவது வழங்கியிருக்க வேண்டும். ஆனால் ஒரு தலைமுறையே அதைப் பற்றி மறந்து போகும் தவறைச் செய்துவிட்டது. மேற்கத்தியமோகம் கொண்டு, ஆங்கிலக் கல்வி முறையை ஆதரித்த பெற்றோர்கள் குறிப்பாகத் தாய்மார்கள் பண்பாட்டுக் கல்வியை அன்புடன் குழைத்துத் தந்து குழந்தைகளின் முழு வளர்ச்சிக்கு வழி வகுத்திருக்க வேண்டும். இதில் அவர்கள் தவறிவிட்டார்கள். இன்றைய தீவிரவாதிகள் யார் என்று பார்த்தால் இந்த அரைவேக்காட்டுக் கல்வி முறையில் பயின்று வந்தவர்கள்தான் என்று தெரியும்.

கே: தீவிரவாதிகள் எல்லோரும் முறையான கல்வி பெற்றவர்கள்தானா என்பது ஆராய்ச்சிக்குரியது. அவர்களை இயக்கும் தலைவர்கள் வேண்டுமானால் ஓரளவு கல்வி பயின்றவர்களாய் இருக்கலாம்.

ப: கல்வியறிவு இல்லாத எளியவர்கள், நமது அரைகுறைக் கல்வியைப் பயின்ற வலியாருடைய சுயநலத்துக்கு ஏற்பப் பயன்படுத்தப்படுகிறார்கள்.

கே: சமய உணர்வு பற்றிய விழிப்புணர்ச்சியை இளைய தலைமுறையினரிடையே ஏற்படுத்த என்ன செய்து வருகிறீர்கள்?

ப: 'சம்ஸ்க்ருதி' என்ற ஓர் அமைப்பை உருவாக்கி அதன்கீழ் இளைஞர்களுக்கு விடுமுறை நாட்களில் பயிற்சி முகாம்கள் நடத்தும் திட்டம் ஒன்றை வகுத்துள்ளேன். இந்த முகாம்கள் கிராமங்களில் நடத்தப்படும். முதல் முயற்சியாக இப்படி நடத்தப்பட்ட முகாம் ரொம்ப வெற்றிகரமாக அமைந்தது. பிரார்த்தனை, தியானம், சமூக சேவை ஆகியவற்றுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படும். விஞ்ஞான, பூகோள, சரித்திர வினாடி வினாக்களில் வெளுத்து வாங்கும் நம் இளைஞர்கள் "ராமனின் தந்தை யார்?" என்ற கேள்விக்குப் பதில் சொல்ல யோசிக்கிறார்கள். இந்த நிலைமையை உணர்ந்து ஆன்மிக குவிஸ் நிகழ்ச்சிகள் நடத்தலானேன். இன்றைய இளைஞர்களுக்குப் பிரார்த்தனை செய்யக் கூடத் தெரிவதில்லை. ஏதேனும் பிரச்னை ஏற்பட்டால் போதைப் பொருள்களை நாடுகிறார்

களையொழிய இறைவனிடம் வேண்டுவதில்லை. எனது பயிற்சி முகாமில் பங்கேற்கும் இளைஞர்களுக்குப் பிரார்த்தனையின் மகிமையையும் வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் இருக்க வேண்டியதன் அவசியத்தையும் உணர்த்துவேன்.

கே: பிரச்னை ஏற்பட்டால் போதைப் பொருளை நாடுவதற்குப் பதில், பிரார்த்திக்கக் கூறுகிறீர்கள். பிரார்த்தனை மட்டும் பிரச்னைகளைத் தீர்த்து வைத்து விடுமா?

ப: ஒவ்வொரு வட்டார அல்லது கிராமத்துக் கோயிலிலும் அப்பகுதி மக்கள் கூடிப் பேசி, சேர்ந்து பிரார்த்தித்து, பொது நலத் திட்டங்களை வகுத்து நிறைவேற்ற 'க்ஷேத்ரக்ஞா' என்ற ஒரு திட்டம் வைத்துள்ளேன். கூட்டுப் பிரார்த்தனை ஒற்றுமையை உருவாக்கும்; கூடிப் பேசுதல் பிரச்னைகளுக்குத் தீர்வு காண உதவும். அந்தக் காலத்தில் கோயில்களை ஏன் இவ்வளவு பெரிதாகக் கட்டினார்கள் என்று நினைக்கிறீர்கள்? எல்லோரும் கூடிப் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்ற நோக்கில்தான். இன்றைக்கோ, நிலைமை தலைகீழ். ஒவ்வொரு இடத்திலும் பணம் செலுத்தி கடவுளைத் தரிசித்து விட்டுத் தனக்காக மட்டுமே பிரார்த்தித்துக் கொள்வதே நடைமுறையாகிவிட்டது. அர்ச்சகர்களும் பொருளாதார நெருக்கடி காரணமாக மனம் ஒன்றாமல் பூஜை செய்கிறார்கள். இந்த அர்த்தமற்ற நடைமுறைகள் மாற வேண்டுமானால் "ஹிந்து மதம் என்பது தனி மனிதனின் நம்பிக்கைகளைப் பொருத்த விஷயம் மட்டுமல்ல. பொது நலனுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதையும் உள்ளடக்கியது" என்ற மாபெரும் உண்மையை உணரவும் உணர்த்தவும் வேண்டும்.

கே: இன்றைய சூழலில் இதை உணர்த்துவது சாத்தியமா?

ப: இப்படியே எல்லாரும் கேட்டுக்கொண்டிருப்பதில் என்ன பயன்? யாரேனும் ஒருவர் முயற்சி செய்ய ஆரம்பிக்க வேண்டும். என் குரல், இப்போதைக்குத் தனியாக ஒலிக்கிறது. அது சிறிய குரல்தான் என்பது எனக்குத் தெரியும். ஆனால் என் உயிருள்ளவரை அது ஒலித்துக் கொண்டே இருக்கும். எல்லா சமய அமைப்புகளுக்கும் இந்த வேண்டுகோளை விடுக்கிறேன்: 'நீங்கள் அமர்ந்திருக்கும் பீடங்களிலிருந்து இறங்கி வாருங்கள். மக்களுடன் ஒன்றுங்கள். கல்வி முறை பக்கம் உங்கள் கவனத்தைத் திருப்புங்கள். இளைஞர்களாக இருக்கும்போதே மனத்தில் நல்ல விஷயங்களைப் பதிய வையுங்கள்' என்று.

கே: ஹிந்து மதம் சடங்குகள் மிகுந்ததாக இருப்பதால்தான் அதற்கு இளைஞர்களிடையே மதிப்பு குறைகிறது என்பீர்களா?

ப: சடங்குகள் அர்த்தத்துடன் ஏற்படுத்தப்பட்டவை. இன்றைக்கு நேரம் இன்மையால் அவை சுமைகளாகத் தோன்றுகின்றன. எனவே அவற்றை எளிமைப்படுத்துவதில் தவறில்லை. ஒருமுறை அனந்தராம தீக்ஷிதரிடம் கேட்டேன், "ஐம்பது பேர் சேர்ந்து உட்கார்ந்து மந்திரம் சொன்னால்தான் இறைவனுக்குக் காது கேட்குமா?" என்று. அதற்கு அவர் சொன்னார்: "எல்லாரும் எல்லா சமயத்திலும் மனம் ஒன்றி மந்திரம் ஓதுவார்கள் என்று சொல்ல முடியாது. ஐம்பது பேரில் யாரேனும் ஒரு சிலரது கவனம் பிசகினாலும் மற்றவர்கள் அந்த வினாடிகளில் மனப்பூர்வமாக தியானம் செய்வார்கள். எனவே குறிப்பிட்ட எந்த ஒரு வினாடியிலும் ஐம்பது பேரில் இருபது இருபத்தைந்து பேருடைய மனமாவது மந்திரத்தில் முழுதுமாக லயித்திருக்கும் என்று உறுதியாக நம்பலாம் அல்லவா?

கே: எல்லாருமே கவனம் சிதறாமல் முழு சிரத்தையுடன் பிரார்த்தனை செய்வது அவசியமில்லையா?

ப: அவசியந்தான். ஆனால் அந்தப் பக்குவ நிலை வர நீண்ட காலம் ஆகும்; ஆழ்ந்த பயிற்சி வேண்டும்.

கே: கடவுள் இல்லை என்று சொல்லும் நாத்திகர்களுக்கு உங்கள் பதில் என்ன?

ப: அவர்களுக்காக நான் பிரார்த்தனை செய்கிறேன்.

பேட்டி: சீதா ரவி

புகைப்படம்: யோகா


மங்கையர் மலர்

பிப்ரவரி-1987

ஆண்டு மலர்



'இவர்கள் விமர்சிக்கிறார்கள்!'

– மங்கையர் மலர் பந்தி

கலைஞர் தமிழ் வாணன் மற்றும்

வாசகிகள்

மற்றும் ஏராளமான சிறப்பம்சங்களுடன்.

# பொன்னியின் செல்வன்

## ஏழாம் அத்தியாயம்

## சிரிப்பும் கொதிப்பும்

அரசுரிமையைப் பற்றிப் பழுவேட்டரையரின் வார்த்தைகளைக் கேட்டதும் வந்தியத்தேவன் உடனே ஒரு முடிவுக்கு வந்தான். அரசுரிமையைப் பற்றி இவர்கள் என்ன பேசப் போகிறார்கள்? இவர்கள் யார் பேசுவதற்கு? இந்தக் கூட்டத்தில் நடக்கப் போவதை அறிந்து கொண்டே தீர வேண்டும்! இங்கேயே உட்கார வேண்டியதுதான். இதைக் காட்டிலும் வசதியான இடம் வேறு கிடைக்காது. ஆழ்வார்க்கடியான் எப்படியாவது போகட்டும். அவனைப் பற்றி நமக்கு என்ன கவலை?

இன்றைக்கு இங்கு ஏதோ மர்மமான நிகழ்ச்சி நடைபெறப் போகிறது என்ற எண்ணம் வந்தியத்தேவன் மனத்தில் முன்னமே உண்டாகியிருந்தது. ஆழ்வார்க்கடியானின் விபரீதமான பொருள் தரும் வார்த்தைகள், கோட்டை வாசற் காவலர்களின் துடுக்கான நடத்தை, சம்புவரையரின் அரைமனதான வரவேற்பு, வெறியாட்டம் ஆடிய சந்நதக்காரனின் ஆவேசமொழிகள்—இவையெல்லாம் அவனுக்கு ஏதேதோ சந்தேகங்களை உண்டாக்கியிருந்தன. அந்தச் சந்தேகங்களையெல்லாம் நீக்கிக்கொள்ளவும் உண்மையை அறிந்து கொள்ளவும் இதோ ஒரு சந்தர்ப்பம் தெய்வாதீனமாகக் கிடைத்திருக்கிறது. அதை ஏன் நழுவவிட வேண்டும்?

ஆகா, தன்னுடைய உயிருக்குயிரான நண்பன் என்று கருதி வந்த கந்தமாறன்கூடத் தன்னிடம் உண்மையைச் சொல்லவில்லை. தன்னைத் தூங்க வைத்துவிட்டு இந்த இரகசிய நள்ளிரவுக் கூட்டத்துக்கு வந்திருக்கிறான்! அவனை நாளைக்கு ஒரு கை பார்க்க வேண்டியதுதான்!

இதற்குள் கீழே பழுவேட்டரையர் பேசத் தொடங்கிவிட்டார். வந்தியத்தேவன் காது கொடுத்துக் கவனமாகக் கேட்கலானான்.

''உங்களுக்கெல்லாம் மிக முக்கியமான ஒரு செய்தியை அறிவிக்கவே நான் வந்திருக்கிறேன். அதற்காகவே இந்தக் கூட்டத்தைச் சம்புவரையர் கூட்டியிருக்கிறார். சுந்தர சோழ மகாராஜாவின் உடல்நிலை மிகக் கவலைக்கிடமாயிருக்கிறது. அரண்மனை வைத்தியர்களிடம் அந்தரங்கமாகக் கேட்டுப் பார்த்தேன். அவர்கள் 'இனி மேல் நம்பிக்கைக்கு இடமில்லை. அதிக

அமரர் கல்கி

காலம் உயிரோடிருக்க மாட்டார்' என்றுசொல்லிவிட்டார்கள். ஆகவே, இனிமேல் நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றி நாம் இப்போது யோசித்தாக வேண்டும்!'' என்று கூறிப் பழுவேட்டரையர் நிறுத்தினார்.

''ஜோசியர்கள் என்ன சொல்லுகிறார்கள்?'' என்று கேட்டார் கூட்டத்தில் ஒருவர்.

''ஜோசியர்களைப் போய்க் கேட்பானேன்? சில நாளாகப் பின் மாலை நேரத்தில்வானத்தில்வால்நட்சத்திரம் தெரிகிறதே! அது போதாதா?'' என்றார் ஒருவர்.

பின்னர் பழுவேட்டரையர் கூறினார்:- ''ஜோசியர்களையும் கேட்டாகிவிட்டது. அவர்கள் சிலகாலம்தள்ளிப் போடுகிறார்கள். அவ்வளவுதான். எப்படியிருந்தாலும், அடுத்தாற்போல் பட்டத்துக்கு உரியவர் யார் என்பதை நாம் யோசித்தாக வேண்டும்.....!''

''அதைப் பற்றி இனி யோசித்து என்ன ஆவது? ஆதித்த கரிகாலருக்குத்தான் இளவரசுப் பட்டம் இரண்டு வருஷத்துக்கு முன்பே கட்டியாகிவிட்டதே!'' என்று இன்னொரு கம்மலான குரல் கூறியது.

''உண்மைதான். ஆனால் அப்படி இளவரசுப் பட்டம் கட்டுவதற்கு முன்னால் நம்மில் யாருடைய யோசனையாவது கேட்கப்பட்டதா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். இங்கே கூடியுள்ள நாம் ஒவ்வொருவரும் நூறு ஆண்டுக்கு மேலாக, நாலு தலைமுறையாக, சோழ ராஜ்யத்தின் மேன்மைக்காகப் பாடுபட்ட பழங்குடியைச் சேர்ந்தவர்கள். என் பாட்டனுருக்குத் தந்தை திருப்புறம்பியம் போரில் இறந்தார். என் பாட்டனார் வேளூரில் நடந்த போரில் உயிர் விட்டார். என் தந்தை தக்கோலத்தில் உயிர்த் தியாகம் செய்தார். அம்மாதிரியே உங்கள் ஒவ்வொருவரின் மூதாதையரும் இந்தச் சோழ நாட்டின் மேன்மையை நிலை நாட்டுவதற்காக உயிரைக் கொடுத்திருக்கிறார்கள். நம் ஒவ்வொருவருடைய குடும்பத்திலும் இளம் பிள்ளைகள் யுத்த களத்தில் செத்திருக்கிறார்கள். இன்றைக்கும் ஈழ நாட்டில் நம்முடைய குலத்தையும் குடும்பத்தையும் சேர்ந்த பிள்ளைகள் போர் செய்து வருகிறார்கள். ஆனால் அடுத்தபடியாகப் பட்டத்துக்கு வர வேண்டியவர் யார் என்பது பற்றித் தீர்மானிப்பதில் நம்முடைய அபிப்பிராயத்தை மகாராஜா கேட்கவில்லை. தசரதர்கூட இராமருக்குப் பட்டம் கட்டுவதுபற்றிமந்திராலோசனை சபை கூட்டி யோசனை செய்தார். மந்திரிகளையும், சாமந்தகர்களையும், சேனைத் தலைவர்களையும், சிற்றரசர்களையும் ஆலோசனை கேட்டார். ஆனால் சுந்தர சோழமகாராஜா யாருடையயோசனையையும் கேட்பது அவசியம் என்று கருதவில்லை....''

''நம்மை யோசனை கேட்கவில்லையென்பது சரிதான். ஆனால் யாரையுமே யோசனை கேட்கவில்லையென்று இறை விதிக்கும் தேவர் கூறுவது சரியன்று. பெரிய பிராட்டியாரான **செம்பியன் மகாதேவி**யின் யோசனையும் இளைய பிராட்டியாரான **குந்தவை தேவி**யின் யோசனையும் கேட்கப்பட்டன. இல்லையென்று பழுவேட்டரையர் கூற முடியுமா?'' என்று கேலியான தொனியில் ஒருவர் கூறவும், கூட்டத்தில் ஒரு சிலர் சிரித்தார்கள்.

''ஆகா! நீங்கள் சிரிக்கிறீர்கள்! எப்படித்தான் உங்களுக்குச் சிரிக்கத் தோன்றுகிறதோ, நான் அறியேன். நினைக்க நினைக்க எனக்கு வயிறு பற்றி எரிகிறது; இரத்தம் கொதிக்கிறது. எதற்காக இந்த உயிரை வைத்துக் கொண்டு வெட்கங்கெட்டு வாழ வேண்டும் என்று தோன்றுகிறது. இன்று சந்நதம் வந்து ஆடிய 'தேவராளன்' துர்க்கை பலி கேட்பதாகச் சொன்னான். ஆயிரம்வருஷத்துப்பரம்பரை ராஜ வம்சத்தில் பிறந்த நரப்லி வேண்டும் என்று சொன்னான். என்னைப் பலி கொடுத்துவிடுங்கள். என்னுடைய குலம் ஆயிரம் ஆண்டுகளுக்கும் தொன்மையானது. நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் கத்தியினால் என் கழுத்தில் ஒரு போடு போட்டுப் பலி கொடுத்து விடுங்கள். அன்னை துர்க்கை திருப்தி அடைவாள்; என் ஆத்மாவும் சாந்தி அடையும்...''

இவ்விதம் ஆவேசம் வந்து ஆடிய சந்நதக்காரனைப் போலவே வெறி கொண்ட குரலில் சொல்லிப் பழுவேட்டரையர் நிறுத்தினார்.

சற்று நேரம் மௌனம் குடி கொண்டிருந்தது. மேற்குத் திசைக் காற்று 'விர்' என்று அடிக்கும் சத்தமும், அந்தக் காற்றில் கோட்டைச் சுவருக்கு வெளியேயுள்ள மரங்கள் ஆடி அலையும் 'மரமர' சத்தமும் கேட்டன.

''ஏதோ தெரியாத்தனமாகப் பேசி விட்ட பரிகாசப் பேச்சையும், அதனால் விளைந்த சிரிப்பையும் பழுவூர் மன்னர் பொறுத்தருள வேண்டும். தாங்கள் எங்களுடைய இணையில்லாத் தலைவர். தாங்கள் இட்ட கட்டளையை நிறைவேற்ற இங்குள்ளவர் அனைவரும் சித்தமாயிருக்கிறோம். தாங்கள் காட்டிய வழியில் நடக்கிறோம். தயவு செய்து மன்னித்துக் கொள்ள வேண்டும்!'' என்று சம்புவரையர் உணர்ச்சியுடனே கூறினார்.

''நானும் கொஞ்சம் பொறுமை இழந்துவிட்டேன். அதற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். ஒரு விஷயத்தை எண்ணிப் பாருங்கள். சரியாக இன்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்னால் விஜயாலய சோழர் முத்தரையர்களை முறியடித்துத் தஞ்சாவூரைக் கைப்பற்றினார். திருப்புறம்பியம் போரில் பல்லவ சைன்யத்துக்குத் துணையாக நின்று மதுரைப் பாண்டியரின் படையை நிர்மூலமாக்கினார். அதுமுதல் சோழ ராஜ்யம் நாளுக்கு நாள் பெருகி விஸ்தரித்து வந்திருக்கிறது. காவேரி நதிக்குக் கரையெடுத்த கரிகால் வளவர் காலத்தில்கூடச் சோழ ராஜ்யம் இவ்வளவு மகோந்நதத்தை அடைந்தது கிடையாது. இன்றைக்குத் தெற்கே குமரி முனையிலிருந்து வடக்கே துங்கபத்திரை — கிருஷ்ணை வரையில் சோழ சாம்ராஜ்யம் பரந்து விரிந்து கிடக்கிறது. பாண்டிய நாடு, நாஞ்சில் நாடு, யாருக்கும் இதுவரையில் வணங்காத சேரநாடு, தொண்டை மண்டலம், பாகி நாடு, கங்கபாடி, நுளம்பபாடி, வைதும்பர் நாடு, சீட்புலி நாடு, பெரும்பாணப்பாடி, பொன்னி நதி உற்பத்தியாகும் குடகு நாடு — ஆகிய இத்தனை நாடுகளும் சோழ சாம்ராஜ்யத்துக்கு அடங்கிக் கப்பம் செலுத்தி வருகின்றன. இவ்வளவு நாடுகளிலும் நம் சோழநாட்டுப் புலிக் கொடி பறக்கிறது. தெற்கே ஈழமும் வடக்கே இரட்டை மண்டலமும் வேங்கியும் கூட இதற்குள் நமக்குப் பணிந்திருக்க வேண்டும். அப்படிப் பணியாததற்குக் காரணங்களை நான் சொல்ல வேண்டியதில்லை; அவைகள் எல்லாம் உங்களுக்குத் தெரிந்ததுதான்....!''

''ஆம். எல்லாருக்கும் தெரியும். ஈழமும் இரட்டைபாடியும் வேங்கியும் கலிங்கமும் பணியாததற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒரு காரணம் வடதிசை மாதண்ட நாயகராகிய இளவரசர் ஆதித்த கரிகாலர்; இன்னொரு காரணம் தென்திசைப் படைத் தலைவரான அருள்மொழி வர்மர்....''

''மழவரையர் கூறும் காரணத்தை நான் ஒப்புக் கொள்கிறேன். சென்ற நூறாண்டு காலமாக இந்தச் சோழ நாட்டில் சேநாபதி நியமிக்கும் மரபு வேறாயிருந்தது. பல யுத்தங்களில் ஈடுபட்டு அநுபவம் பெற்ற வீராதி வீரர்களையே படைத் தலைவர்களாகவும் மாதண்ட நாயகர்களாகவும் நியமிப்பார்கள். ஆனால் இப்போது நடந்திருப்பது என்ன? மூத்த இளவரசர் வடதிசைச் சேனையின் சேநாதிபதி. அவர் என்ன செய்கிறார்? இரட்டை மண்டலத்தின் மீதும் வேங்கி நாடு மீதும் படையெடுத்துப் போகவில்லை. காஞ்சிபுரத்தில் உட்கார்ந்து கொண்டு பொன் மாளிகை கட்டிக்கொண்டிருக்





கிறார். வீரப் பெருங்குடியில் பிறந்த வீராதி வீரர்களாகிய உங்களைக் கேட்கிறேன். இதற்கு முன்னால் தமிழகத்தில் எந்த மன்னராவது தாம் வசிப்பதற்குப் பொன்னால் மாளிகை கட்டியதுண்டா? உலகெங்கும் புகழ் பரப்பி இப்போது கைலாசவாசியாயிருக்கும் மதுரையும் ஈழமும் கொண்ட பராந்தக சக்கரவர்த்தி கூடத் தாம் வசிப்பதற்குப் பொன் மாளிகை கட்டிக் கொள்ளவில்லை. தில்லைச் சிற்றம்பலத்துக்குத்தான் பொன் கூரை வேய்ந்தார். ஆனால் இளவரசர் ஆதித்த கரிகாலர் தாம் வசிப்பதற்குக் காஞ்சிபுரத்தில் பொன்மாளிகை கட்டுகிறார்! பல்லவ சக்கரவர்த்திகள் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து ராஜ்ய பாரம் புரிந்த அரண்மனைகள் இவருடைய அந்தஸ்துக்குப்போதவில்லையாம். பொன்னிழைத்த அரண்மனை கட்டுகிறார். ரத்தினங்களையும் வைடூரியங்களையும் அப் பொன் மாளிகைச் சுவர்களில் பதிக்கிறார். கங்கபாடி, நுளம்பபாடி, குடகு முதலிய நாடுகளில் வெற்றியடைந்து கைப்பற்றிக் கொண்டு வந்த பொருளில் ஒரு செப்புக் காசாவது தலைநகரிலுள்ள பொக்கிஷ சாலைக்கு அவர் இதுவரை அனுப்பவில்லை....''

''பொன் மாளிகை கட்டி முடிந்துவிட்டதா?''

''ஆம், முடிந்துவிட்டது என்று என்னுடைய அந்தரங்க ஒற்றர்கள் மூலம் அறிந்தேன். அத்துடன் சுந்தர சோழ மகாராஜாவுக்கு அவருடைய அருமை மூத்த புதல்வரிடமிருந்து கடிதங்களும் வந்தன. புதிதாக நிர்மாணித்திருக்கும் பொன் மாளிகையில் வந்து சுந்தர சோழ மகாராஜா சில காலம் தங்கியிருக்க வேண்டும் என்று.''

''மகாராஜா காஞ்சிக்குப் போகப் போகிறாரா?'' என்று ஒருவர் கவலை ததும்பிய குரலில் கேட்டார்.

''அத்தகைய கவலை உங்களுக்கு வேண்டாம். அப்படி ஒன்றும் நேராமல் பார்த்துக் கொள்ள நான் இருக்கிறேன்; தஞ்சைக் கோட்டைக் காவலனாகிய என் சகோதரனும் இருக்கிறான். சின்னப் பழுவேட்டரைய்ன் அனுமதி இல்லாமல் யாரும் தஞ்சை கோட்டைக்குள் புக முடியாது. என்னையறியாமல் யாரும் மகாராஜாவைப் பேட்டி காணவும் முடியாது; ஓலை கொடுக்கவும் முடியாது. இதுவரையில் இரண்டு மூன்று தடவை வந்த ஓலைகளை நிறுத்திவிட்டேன்.''

''வாழ்க பழுவேட்டரையர்!'' ''வாழ்க பழுவூர் மன்னரின் சாணக்ய தந்திரம்!'' ''வாழ்க அவர் வீரம்!'' என்னும் கோஷங்கள் எழுந்தன.

''இன்னும் கேளுங்கள். பட்டத்து இளவரசர் செய்யும் காரியங்களைக் காட்டிலும் ஈழத்தில் போர் நடத்தச் சென்றிருக்கும் இளவரசர் அருள்மொழி வர்மரின் காரியங்கள் மிக மிக விசித்திரமாயிருக்கின்றன. யுத்த தர்மத்தைப் பற்றி நாம் அறிந்திருப்ப

தென்ன? பரம்பரையாகப் பல நூறு ஆண்டுகளாக் நம் முன்னோர்கள் கடைப்பிடித்து வந்திருப்பதென்ன?

**நம் நாட்டுப் படைகள் வேறு நாடுகளின் மீது படை எடுத்துச் சென்றால், நம் படைகளுக்கு வேண்டிய உணவுகளை அந்த வேற்று நாடுகளிலேயே சம்பாதித்துக் கொள்ள வேண்டும்.**

அந்த நாடுகளில் கைப்பற்றும் பொருளைக் கொண்டே வீரர்களுக்கு ஊதியமும் கொடுக்க வேண்டும். மிகுந்த பொருளைத் தலைநகரிலுள்ள அரசாங்க பொக்கிஷத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும். ஆனால் இளவரசர் அருள்மொழி வர்மர் என்ன செய்கிறார் தெரியுமா? ஈழநாட்டிலுள்ள நம்போர் வீரர்களுக்கெல்லாம் இங்கிருந்து கப்பல்களில் உணவு அனுப்பி வைக்க வேண்டுமாம்! ஒரு வருஷ காலமாக நானும் பத்துத் தடவை பல கப்பல்களில் ஏற்றி உணவு அனுப்பி வந்திருக்கிறேன்....''

''விந்தை! விந்தை!'' ''இந்த அநியாயத்தைப் பொறுக்க முடியாது!'' ''இப்படிக் கேட்டதே இல்லை!'' என்ற குரல்கள் எழுந்தன.

''இந்த அதிசயமான காரியத்துக்கு இளவரசர் அருள்மொழிவர்மர் கூறும் காரணத்தையும் கேட்டு வையுங்கள். படை எடுத்துச் சென்ற நாட்டில் நம் வீரர்களுக்கு வேண்டிய உணவுப் பொருளைச் சம்பாதிப்பது என்றால், அங்குள்ள குடிமக்களின் அதிருப்திக்கு உள்ளாக நேரிடுமாம். ஈழத்து அரச குலத்தாரோடு நமக்குச் சண்டையே தவிர ஈழத்து மக்களோடு எவ்விதச் சண்டையும் இல்லையாம். ஆகையால் அவர்களை எந்தவிதத்திலும் கஷ்டப் படுத்தக் கூடாதாம்! அரச குலத்தாருடன் போராடி வென்றபிறகு மக்களின் மனமார்ந்த விருப்பத்துடன் ஆட்சி நடத்த வேண்டுமாம். ஆகையால் பணமும் உணவும் இங்கிருந்து அனுப்ப வேண்டுமாம்!''



இச்சமயம் கூட்டத்தில் ஒருவர், ''படையெடுத்துச் சென்ற நாடுகளில் உள்ள ஜனங்களிடம் ஒன்றுமே கேட்கக் கூடாது; அவர்களின் காலில் விழுந்து கும்பிட வேண்டும் என்ற யுத்த தர்மத்தை இது வரை நாங்கள் கேட்டதே கிடையாது!'' என்றார்.

''அதனால் விளையும் விபரீதத்தையும் கேளுங்கள். இரண்டு இளவரசர்களும் சேர்ந்து செய்யும் காரியங்களினால் தஞ்சை அரண்மனைத் தனபொக்கிஷமும் தானிய பண்டாரமும் அடிக்கடி மிகக் குறைந்து போகின்றன. உங்களுக்கெல்லாம் அதிக வரி போட்டு வசூலிக்கும் நிர்ப்பந்தம் எனக்கு ஏற்படுகிறது. இதற்காகத்தான் என்னை இறைஅதிகாரியாகநியமித்திருக்கிறார்கள்! சோழ நாட்டின் மேன்மையே முக்கியம் என்று நான் கருதியிரா விட்டால், எப்பொழுதோ இப்பதவியை விட்டுத் தொலைத்திருப்பேன்.''

''ஆ! கூடவே கூடாது! தாங்கள் இப்பதவியிலிருப்பதுதான் எங்களுக்கெல்லாம் பெரிய பாதுகாப்பு. இந்த முறைகேடான காரியங்களைப் பற்றித் தாங்கள் மகாராஜாவிடம் சொல்லிப் பார்க்கவில்லையா!''

''சொல்லாமல் என்ன! பல தடவை சொல்லியாகிவிட்டது. ஒவ்வொரு தடவையும் 'பெரிய பிராட்டியிடம் கேளுங்கள்; இளைய பிராட்டியிடம் கேளுங்கள்!' என்ற மறுமொழி தான் கிடைக்கிறது. முன்னமேதான் சொன்னேனே, மகாராஜாவுக்குச் சுயமாகச் சிந்தனை செய்யும் சக்தியே இப்போது இல்லாமற் போய்விட்டது! முக்கியமான காரியங்களில் நம்முடைய யோசனைகளைக் கேட்பதும் இல்லை. அவருடைய பெரியன்னை செம்பியின் மாதேவியின் வாக்குத்தான் அவருக்கு வேதவாக்கு; அடுத்த

படியாக, அவருடைய செல்வக் குமாரி குந்தவைப் பிராட்டியிடம் யோசனை கேட்கச் சொல்கிறார். இராஜ்ய சேவையில் தலை நரைத்துப் போன நானும் மற்ற அமைச்சர்களும் அந்தச் சின்னஞ் சிறு பெண்ணிடம்—கொள்ளிடத்துக்கு வடக்கேயும் குடமுருட்டிக்குத் தெற்கேயும் சென்றறியாத பெண்ணிடம் — யோசனை கேட்பதற்குப் போய் நிற்க வேண்டும். எப்படியிருக்கிறது கதை! இந்த சோழ ராஜ்யம் ஆரம்பமான காலத்திலிருந்து இப்படி இராஜ்ய காரியங்களில் பெண்கள் தலையிட்டதாக நாம் கேள்விப்பட்டதில்லை! இத்தகைய அவமானத்தை எத்தனை நாள் நாம் பொறுத்திருக்க முடியும்? அல்லது நீங்கள் எல்லாரும் ஒருமுகமாகச் சொன்னால், நான் இந்த ராஜாங்கப் பொறுப்பையும் வரி விதித்துப் பொக்கிஷத்தை நிரப்பும் தொல்லையையும் விட்டு விட்டு என் சொந்த ஊரோடு இருந்து விடுகிறேன்...''

''கூடாது! கூடாது! பழுவூர்த்தேவர் அப்படி எங்களைக் கைவிட்டுவிடக் கூடாது. அரும்பாடுபட்டு, ஆயிரமாயிரம் வீரர்கள் நாலு தலைமுறைகளாகத் தங்கள் இரத்தத்தைச் சிந்தி ஸ்தாபித்த சோழ சாம்ராஜ்யம் ஒரு நொடியில் சின்ன பின்னமாய்ப் போய் விடும்'' என்றார் சம்புவரையர்.

''அப்படியானால் இந்த நிலைமையில் என்ன செய்வது என்று நீங்கள் தான் எனக்கு யோசனை சொல்ல வேண்டும். அல்லி ராஜ்யத்தை விடக் கேவலமாகிவிட்ட இந்தப் பெண்ணரசுக்குப் பரிகாரம் என்ன என்று நீங்கள்தான் சொல்ல வேண்டும்'' என்றார் பழுவூர் மன்னர்.

# எட்டாம் அத்தியாயம்.

## பல்லக்கில் யார்?

சற்று நேரம் அந்தக் கூட்டத்தில் ஒருவருக்கொருவர் ஏதோ பேசி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். பல குரல்கள் ஒருங்கே கலந்து ஒலித்தபடியால் வந்தியத் தேவன் காதில் ஒன்றும் தெளிவாக விழவில்லை.

சம்புவரையர் உரத்த குரலில், ''பழுவூர் மன்னர் கேட்டதற்கு நாம் மறுமொழி சொல்ல வேண்டாமா? தலைக்குத் தலை பேசிக் கொண்டிருந்தால் என்ன ஆகிறது? இரவு மூன்றாம் ஜாமம் ஆரம்பமாகிவிட்டது. அதோ சந்திரனும் வந்துவிட்டது!'' என்றார்.

''எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. என்னைப் போல் இன்னும் சிலருடைய மனத்திலும் அது இருக்கலாம். பழுவூர்த் தேவர் கோபித்துக் கொள்வதில்லையென்றால், அதைப் பற்றிக் கேட்க விரும்புகிறேன்!'' என்று முன்னால் ஒரு தடவை பேசிய கம்மல் குரல் சொல்லிற்று.

''இப்போது பேசுகிறது வணங்காமுடியார்தானே? எழுந்து நன்றாக வெளிச்சத்திற்கு வரட்டும்!'' என்றார் பழுவேட்டரையர்.

''ஆமாம்; நான்தான். இதோ வெளிச்சத்துக்கு வந்துவிட்டேன்.''

''என்னுடைய கோபத்தையெல்லாம் நான் போர்க்களத்தில் காட்டுவதுதான் வழக்கம்; பகைவர்களிடம் காட்டுவது வழக்கம். என் சிநேகிதர்களிடம் காட்ட மாட்டேன். ஆகையால் எது வேண்டுமானாலும் மனம் விட்டுத் தாராளமாகக் கேட்கலாம்.''

''அப்படியானால் கேட்கிறேன். சுந்தர சோழ மகாராஜாவின் பேரில் பழுவேட்டரையர் என்ன குற்றம் சொல்கிறாரோ, அதே குற்றத்தைப் பழுவேட்டரையர் மீதும் சிலர் சுமத்துகிறார்கள்! அதை நான் நம்பாவிட்டாலும் இந்தச் சமயத்தில் கேட்டுத் தெளிய விரும்புகிறேன்'' என்றார் வணங்காமுடியார்.

''அது என்ன? எப்படி? விவரம் சொல்ல வேணும்.''

''பழுவூர்த்தேவர் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பெண்ணை மணம் புரிந்து கொண்டது நம் எல்லாருக்



கும் தெரியும்....

இச்சமயம், சம்புவரையரின் குரல் கோபத்தொனியில், ''வணங்கா முடியார் இந்த விஷயத்தைப் பற்றிப் பேசுவதை நாங்கள் ஆட்சேபிக்கிறோம். நம் மாபெருந் தலைவரை, நமது பிரதம விருந்தாளியை, இவ்விதம் அசந்தர்ப்பமான கேள்வி கேட்பது சிறிதும் தகாத காரியம்....'' என்றார்.

''சம்புவரையரைப் பொறுமையாயிருக்கும்படி நான் ரொம்பவும் கேட்டுக் கொள்கிறேன். வணங்கா முடியார் கேட்க விரும்புவதைத் தாராளமாகக் கேட்கட்டும். மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டிருப்பதை விடக் கிறிக் கேட்டுவிடுவதே நல்லது. ஐம்பத்தைந்து பிராயத்துக்கு மேல் நான் ஒரு பெண்ணை மணந்து கொண்டது உண்மைதான். அதைத் தாராளமாக ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நான்தான் கலியுக ராமாவதாரம் என்று எப்போதும் சொல்லிக் கொண்டதில்லை. ஏக பத்தினி விரதம் கொண்டவன் என்றும் சொல்லிக் கொண்டதில்லை. அந்தப் பெண்ணை நான் காதலித்தேன்; அவளும் என்னைக் காதலித்தாள். பழந்தமிழ் நாட்டு முறைப்படி இஷ்டப்பட்டு மணந்து கொண்டோம். இதில் என்ன தவறு?''

''**ஒரு தவறும் இல்லை!**'' என்று பல குரல்கள் எழுந்தன.

''மணம் புரிந்து கொண்டது தவறு என்று நானும் சொல்லவில்லை. நம்மில் யார்தான் ஒரு தார விரதம் கொண்டவர்கள்? ஆனால்.... ஆனால்....''

''ஆனால் என்ன! தயங்காமல் மனத்தைத் திறந்து கேட்டுவிடுங்கள்!''

''புதுமணம் புரிந்து கொண்ட இளைய ராணியின் சொல்லை எல்லாக் காரியங்களிலும் பழுவேட்டரையர் கேட்டு நடப்பதாகச் சிலர் சொல்கிறார்கள். இராஜரீக காரியங்களில் கூட இளைய ராணியின் யோசனையைக் கேட்பதாகச் சொல்லுகிறார்கள். தாம் போகுமிடங்களுக்கெல்லாம் இளைய ராணியையும் அழைத்துப்போவதாகச் சொல்கிறார்கள்.''

இப்போது கூட்டத்தில் ஒரு சிரிப்புச் சத்தம் எழுந்தது.

சம்புவரையர் குதித்து எழுந்து ''சிரித்தது யார்? உடனே முன் வந்து சிரித்ததற்குக் காரணம் சொல்லட்டும்!'' என்று கர்ஜித்துக் கத்தியை உறையிலிருந்து உருவினார்.

''நான்தான் சிரித்தேன்! பதற வேண்டாம், சம்புவரையரே!'' என்றார் பழுவேட்டரையர். பிறகு, ''வணங்கா முடியாரே! தாலி கட்டி மணந்த மனைவியை நான் போகுமிடத்துக்கெல்லாம் அழைத்துப் போவது குற்றமா? அவ்விதம் நான் பல இடங்களுக்கு அழைத்துப் போவது உண்மைதான். ஆனால் ராஜரீக காரியங்களில் இளைய ராணியின் யோசனையைக் கேட்கிறேன் என்று சொல்வது மட்டும் பிசகு. அவ்விதம் நான் ஒரு நாளும் செய்வதில்லை....''

''அப்படியானால், இன்னும் ஒரே ஒரு சந்தேகத்தை மட்டும் நிவர்த்தி செய்யும்படி பழுவூர்த் தேவரை வேண்டிக் கொள்கிறேன். அந்தப்புரத்தில் இருந்திருக்க வேண்டிய பல்லக்கு இங்கே நாம் அந்தரங்க யோசனை செய்யும் இடத்திற்கு ஏன் வந்திருக்கிறது? பல்லக்கிற்குள்ளே யாராவது இருக்கிறார்களா, இல்லையா? இல்லையென்றால் சற்று முன்பு கேட்ட கனைப்புச் சத்தமும், வளையல் குலுங்கும் சத்தமும் எங்கிருந்து வந்தன?''

இவ்விதம் வணங்கா முடியார் கேட்டதும் அந்தக் கூட்டத்தில் ஒரு விசித்திரமான நிசப்தம் நிலவிற்று. பலருடைய மனத்திலும் இதேவித எண்ணமும் கேள்வியும் தோன்றி

மிருந்தபடியால், வணங்கா முடியாரை எதிர்த்துப் பேச யாருக்கும் உடனே துணிவு ஏற்படவில்லை. சம்புவரையரின் உதடுகள் ஏதோ முணுமுணுத்தன. ஆனால் அவர் வாயிலிருந்தும் வார்த்தை ஒன்றும் கேட்கவில்லை.

அந்த நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு பழுவேட்டரையர் கணீர் என்று கூறினார்:—"சரியான கேள்வி; மறுமொழி சொல்ல நான் கடமைப்பட்டவன். இந்தக் கூட்டம் கலைவதற்கு முன்னால் உங்கள் சந்தேகத்தைத் தீர்த்து வைக்கிறேன். இன்னும் அரை நாழிகை பொறுத்திருக்கலாம் அல்லவா? அவ்வளவு நம்பிக்கை என்னிடம் உங்களுக்கு இருக்கிறது அல்லவா?"

"இருக்கிறது. இருக்கிறது. பழுவேட்டரையரிடம் எங்களுக்குப் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது!" என்று பல குரல்கள் கூவின.

"மற்றவர்களைக் காட்டிலும் பழுவேட்டரையரிடம் எனக்குப் பக்தியும் மரியாதையும் குறைவு என்று யாரும் எண்ண வேண்டாம். அவர் மனத்தைத் திறந்து கேட்கச் சொன்னபடியால் கேட்டேன். மற்றபடி அவர் இட்ட கட்டளையை நிறைவேற்றச் சித்தமாயிருக்கிறேன். இந்தக் கணத்தில் என் உயிரைக் கொடுக்கச் சொன்னாலும் கொடுக்கச் சித்தம்!" என்றார் வணங்காமுடி முனையரையர்.

"வணங்கா முடியாரின் மனத்தை நான் அறிவேன். நீங்கள் எல்லாரும் என்னிடம் வைத்துள்ள நம்பிக்கையையும் அறிவேன். ஆகையால், இன்று எதற்காகக் கூடினோமோ, அதைப் பற்றி முதலில் முடிவு கொள்வோம். சுந்தர சோழ மகாராஜா நீடூழி இவ்வுலகில் வாழ்ந்து இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஆளட்டும். ஆனால் ஒரு வேளை ஏதாவது அவருக்கு நேர்ந்துவிட்டால், வைத்தியர்களுடைய வாக்குப் பலித்துவிட்டால், சில நாளாகத் தோன்றி வரும் தூமகேது முதலிய உற்பாதங்கள் பலித்துவிட்டால், அடுத்தபடி இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்துக்கு உரியவர் யார் என்பதை நாம் தீர்மானிக்க வேண்டும்."

"அது விஷயமாகத் தங்கள் கருத்தைத் தெரிவிக்கும்படி கோருகிறோம். தங்களுடைய கருத்துக்கு மாறாகச் சொல்லக் கூடியவர் இந்தக் கூட்டத்தில் யாரும் இல்லை."

"அது சரியல்ல. ஒவ்வொருவரும் சிந்தித்துத் தங்கள் கருத்தை வெளியிட வேண்டும். சில பழைய செய்திகளை உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். மகா வீரரும் மகா ஞானியும் புண்ணிய புருஷருமான கண்டராதித்த தேவர் யாரும் எதிர்பாராத வண்ணம் இருபத்து நாலு ஆண்டுகளுக்கு முன்னால் காலமானார். அச்சமயம் அவருடைய புதல்வர் மதுராந்தகத் தேவர் ஒரு வயதுக் குழந்தை. ஆகவே தமது தம்பி அரிஞ்சய தேவர் பட்டத்துக்கு வரவேண்டும் என்று திருவாய் மலர்ந்துவிட்டுப் போனார். இதை அவருடைய தர்மபத்தினியும் பட்ட மகிஷியுமான செம்பியன் மாதேவிதான் நமக்கு அறிவித்தார்கள். அந்தப்படியே அரிஞ்சய சோழருக்கு முடிசூட்டிச் சக்கரவர்த்தி பீடத்தில் அமர்த்தினோம். ஆனால் விதிவசமாக அரிஞ்சய சக்கரவர்த்தி சோழ சிம்மாசனத்தில் ஓர் ஆண்டுக்கு மேல் அமர்ந்திருக்கவில்லை. அரிஞ்சய சோழருடைய மூத்த புதல்வர் பராந்தக சுந்தர சோழர் இருபது வயது இளங் காளைப் பருவம் எய்தியிருந்தார். எனவே ராஜ்யத்தின் நன்மையை முன்னிட்டு மந்திரிகளும் சாமந்தர்களும் குறுநில மன்னர்களும் நகரத் தலைவர்களும் கூற்றத் தலைவர்களும் சேர்ந்து யோசித்துப் பராந்தக சுந்தர சோழருக்கு முடி சூட்டினோம். அதைக்குறித்து யாரும் வருத்தப்பட இடமில்லை. ஏனெனில், சுந்தர சோழ மகாராஜா இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் வரையில் நெறி தவறாமல் நாட்டைப் பரிபாலித்து வந்தார். நம்மையெல்லாம் நன்கு மதித்து யோசனை கேட்டு ராஜ்யபாரம் நடத்தினார். இதனால் சோழ ராஜ்யம் மேலும் விஸ்தரித்துச் செழித்தது. இப்போது சுந்தர சோழ மகாராஜாவின் உடல்நிலை கவலைக்கிடமாகியிருக்கிறது. இந்த நிலைமையில் அடுத்தபடி பட்டத்துக்குரியவர் யார்? கண்டராதித்த தேவரின் திருக்குமாரர் மதுராந்தகர் இப்போது பிராயம்வந்து

ராஜ்ய பரிபாலனம் செய்யக் கூடியவராயிருக்கிறார். அறிவினாலும் கல்வியினாலும்குணத்தினாலும்பக்திசிரத்தையினாலும் எல்லாவிதத்திலும் பட்டத்துக்குத் தகுந்தவராயிருக்கிறார். அவரிலும் ஒரு வயது இளையவரான ஆதித்த கரிகாலர்—சுந்தரசோழரின் புதல்வர்—காஞ்சியில் வடதிசைப் படையின் சேனாதிபதியாக இருந்து வருகிறார். இந்த இருவரில் யார் பட்டத்துக்கு வருவது நியாயம்? குலமுறை என்ன? மனு நீதி என்ன? தமிழகத்தின் பழைமையான மரபு என்ன? மூத்தவரின் புதல்வர் மதுராந்தகர் பட்டத்துக்கு வருவது நியாயமா? அல்லது இளையவரின் பேரர் பட்டத்துக்கு வருவது முறைமையா? நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் கருத்தை மனம் விட்டுச் சொல்ல வேண்டும்....''

''மூத்தவராகிய கண்டராதித்த தேவரின் புதல்வர் மதுராந்தகர்தான் பட்டத்துக்கு உரியவர். அதுதான் நியாயம், தர்மம், முறைமை'' என்றார் சம்புவரையர்.

''என் அப்பிப்ராயமும் அதுவே'' ''என் கருத்தும் அதுவே!'' என்று அக் கூட்டத்தில் உள்ள ஒவ்வொருவரும் சொல்லி வந்தார்கள்.

''உங்கள் அபிப்பிராயம்தான் என் அபிப்பிராயமும். மதுராந்தகருக்குத்தான் பட்டம் உரியது. ஆனால் அந்த உரிமையை நிலைநாட்டுவதற்காக நாம் ஒவ்வொருவரும்பிரயத்தனம்செய்யச் சித்தமாயிருக்கிறோமா? உடல், பொருள், ஆவியைத் தத்தம் செய்து போராடச் சித்தமாய் இருக்கிறோமா? இந்த நிமிஷத்தில் துர்க்காதேவியின் பாதத்தில் ஆணையிட்டு அவ்விதம் சபதம் செய்வதற்குச் சித்தமாயிருக்கிறோமா?'' என்று பழுவேட்டரையர் கேட்டபோது அவர் குரலில் அதுவரையில் இல்லாத ஆவேசம் தொனித்தது.

கூட்டத்தில் சிறிது நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. பிறகு சம்புவரையர், ''அவ்விதமே தெய்வ சாட்சியாகச் சபதம் கூறச் சித்தமாயிருக்கிறோம். ஆனால் சபதம் எடுத்துக்கொள்வதற்கு முன்னால் ஒரு விஷயத்தைத் தாங்கள் தெளிவுபடுத்த வேண்டும். இளவரசர் மதுராந்தகரின் கருத்து என்ன? அவர் சிங்காதனம் ஏறி ராஜ்ய பாரத்தை ஏற்கச் சித்தமாயிருக்கிறாரா? கண்டராதித்தரின் தவப்புதல்வர் உலகவாழ்க்கையை வெறுத்துச் சிவபக்தியில் பூரணமாக ஈடுபட்டுள்ளார் என்று கேள்விப்படுகிறோம். இராஜ்யத்தில் அவருக்கு விருப்பமில்லை என்று பலர் சொல்லவும் கேட்டிருக்கிறோம். அவருடைய அன்னையார் செம்பியன் மாதேவியார் தமது புதல்வர் பட்டத்துக்கு வருவதற்கு முற்றும் விரோதமாய் இருக்கிறார் என்றும் கேட்டிருக்கிறோம். தங்களிடமிருந்து இதைப் பற்றிய உண்மையை அறிய விரும்புகிறோம்.''

''சரியான கேள்வி; தக்க சமயத்தில் கேட்டீர்கள். இதைத் தெளிவுபடுத்தும் கடமையும் எனக்கு உண்டு. முன்னமே சொல்லியிருக்க வேண்டும். சொல்லத் தவறியதற்காக மன்னியுங்கள்'' என்று பீடிகை போட்டுக் கொண்டு பழுவேட்டரையர் கூறத் தொடங்கினார்:— ''செம்பியன் மாதேவி தமது ஏக புதல்வரை இராஜ்யபார ஆசையிலிருந்து திருப்பிச் சிவபக்தி மார்க்கத்தில் செலுத்துவதற்குப் பிரயத்தனப்பட்டு வந்தது நாடு அறிந்த விஷயம். ஆனால் இதன் காரணம் என்னவென்பதை நாடும் அறியாது; நாட்டு மக்களும் அறியார்கள். மதுராந்தகருக்கு இராஜ்யமாளும் விருப்பம் இருப்பதாகத் தெரிந்தால் அவருடைய உயிருக்கே ஆபத்து வரலாம் என்று பெரிய பிராட்டியார் பயந்ததுதான் காரணம்....''

''ஆஹா!'' ''அப்படியா?'' என்ற குரல்கள் கூட்டத்தில் எழுந்தன.

''ஆம்; பெற்ற தாய்க்குத் தன் ஏக புதல்வன் சிம்மாசனம் ஏற வேண்டும் என்னும் ஆசையைக் காட்டிலும் பிள்ளை உயிரோடிருக்க வேண்டும் என்ற ஆசைதானே அதிகமாயிருக்கும்? அன்னையின் வாக்கே தெய்வத்தின் வாக்கு என்று மதித்து வந்த மதுராந்தகரும் மனத்தை விரக்தி மார்க்கத்

தில் செலுத்தியிருந்தார். சிவ பக்தியில் முழுதும் ஈடுபட்டிருந்தார். ஆனால் சில காலமாக அவருடைய மனம் சிறிது சிறிதாக மாறி வந்திருக்கிறது. இந்தச் சோழ சாம்ராஜ்யம் தமக்கு உரியது, அதைப் பராமரிப்பது தம்முடைய கடமை என்ற எண்ணம் அவருடைய மனத்தில் வேரூன்றி வளர்ந்திருக்கிறது. நீங்கள் எல்லாம் அவரை ஆதரிப்பதாகத் தெரிந்தால், தக்க சமயத்தில் பகிரங்கமாக முன்வந்து சொல்லவும் சித்தமாயிருக்கிறார்....."

"இதற்கு அத்தாட்சி என்ன?"

"உங்களுக்கெல்லாம் திருப்தி தரக் கூடிய அத்தாட்சியை இப்போதே அளிக்கிறேன். அளித்தால் அனைவரும் பிரமாணம் செய்யச் சித்தமாயிருக்கிறீர்களா?"

பல குரல்கள், "இருக்கிறோம்! இருக்கிறோம்!" என்று ஒலித்தன.

"யாருடைய மனத்திலும் வேறு எவ்விதச் சந்தேகமும் இல்லையே?"

"இல்லை! இல்லை!"

"அப்படியானால் இதோ அத்தாட்சி கொண்டு வருகிறேன். வணங்காமுடி முனையரையரின் சந்தேகத்தையும் இப்போதே தீர்த்து வைக்கிறேன்!" என்று கூறிக் கொண்டே பழுவேட்டரையர் எழுந்தார். கம்பீரமாக நடந்து அங்கே சமீபத்தில் வைக்கப்பட்டிருந்த மூடு பல்லக்கின் சமீபத்தில் சென்றார்.

"இளவரசே! பல்லக்கின் திரையை விலக்கிக் கொண்டு வெளியே எழுந்தருள வேண்டும். தங்களுக்காக உடல் பொருள் ஆவியை அர்ப்பணம் செய்யச் சித்தமான இந்த வீராதி வீரர்களுக்குத் தங்கள் முக தரிசனத்தைத் தந்தருள வேண்டும்!" என்று மிகவும் பணிவான குரலில் கூறினார்.

மேல் மாடத்தில் தூண் மறைவில் உட்கார்ந்து ஒரு வார்த்தை விடாமல் அடங்கா ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத் தேவன் இப்போது ஜாக்கிரதையாகக் கீழே பார்த்தான். பல்லக்கின் திரையை முன் போலவே ஒரு கரம் விலக்கிற்று. அது பொன் வண்ணமான கரம். முன்னே ஒருமுறை அவன் பார்த்த அதே செக்கச் சிவந்த கரந்தான். ஆனால் அவன்



முன்னம் வளையல் என்று நினைத்தது உண்மையில் அரச குமாரர் அணியும் கங்கணம் என்பதை இப்போது கண்டான். அடுத்த கணம், பூரண சந்திரனையொத்த அந்தப் பொன் முகமும் தெரிந்தது. மன்மதனையொத்த ஓர் அழகிய உருவம் பல்லக்கிலிருந்து வெளியே வந்து புன்னகை புரிந்து நின்றது. ஆகா! கண்டராதித்த தேவரின் புதல்வரான இளவரசர் மதுராந்தகரா இவர்! பல்லக்கினுள் இருந்தபடியால் பெண்ணாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தினால் அல்லவா அந்தத் தவறைச் செய்துவிட்டோம்? தன்னைப் போல அதே தவறைச் செய்த ஆழ்வார்க்கடியான் நம்பி சுவர் மேல் தலையை நீட்டிக் கொண்டிருக்கிறானா என்று வந்தியத் தேவன் பார்த்தான். அந்த இடத்தில் மர நிழல் விழுந்து இருள் சூழ்ந்திருந்தது. ஆகையினால் அங்கு ஒன்றும் தெரியவில்லை.

இதற்குள் கீழே, "மதுராந்தகத் தேவர் வாழ்க! பட்டத்து இளவரசர் வாழ்க! வெற்றி வேல்! வீரவேல்!" என்ற ஆவேசமான முழக்கங்கள் கிளம்பின. கூட்டத்தில் இருந்தவர்கள் எல்லாரும் எழுந்து நின்று வாளையும் வேலையும் உயரத் தூக்கிப் பிடித்துக் கொண்டு அவ்விதம் கோஷமிட்டதை வந்தியத் தேவன் கண்டான். இனிமேல் அங்கிருப்பது அபாயமாக முடியலாம் என்று எண்ணித் தான் படுத்திருந்த இடத்துக்கு விரைந்து சென்று படுத்துக் கொண்டான்.

(தொடரும்)

# 1987-ல் வறுமை நம்

தாம் செய்யும் தொழிலில் கடுமையான உழைப்பு

சாஸ்த்திரங்கள் சொல்லிய மலர்க

## அதற்கு சில சான்றுகள் :

அன்னையின் தரிசனம் (மதர்ஸ் சர்வீஸ் சொஸைட்டி பாண்டிச்சேரி அரவிந்த ஆசிரமம் ஸ்ரீ அன்னை)

## சில மலர்களின் சக்தி :

**நாகலிங்கப்பூ :**
அன்றாடம் கடவுளுக்கு அர்ப்பணித்தால் பொருள் பற்றாக்குறையை நீக்கி செல்வத்தை கொடுக்கக்கூடிய ஒரு ஆற்றல் உண்டு.

**முல்லை அரும்பு :**
தூய்மையை கொடுக்கும் ஆற்றல் உண்டு. மனம் முதலிய காரணங்களில் படிந்து இருக்கும் தீய குணங்களை நீக்கி தூய்மையை ஏற்படுத்தும்.

**துளசியின்** உதவியால் நம் நெஞ்சில் பக்தியை பெருக்கிக் கொள்ளலாம்.

**வெள்ளைத் தாமரை :**
இறை உணர்வை நம்மிடம் ஏற்படுத்திக் கொள்ளலாம்.

**அரளிப்பூ :**
நம்மிடம் நிறைந்து உள்ள பொய்களை நீக்கிக் கொள்ளலாம்.

**விருட்சிப்பூ :**
வெண்மை நிறமுள்ள பூ குளுமை நிறைந்த அமைதியை உடலில் உள்ள அணுக்களில் பாய்ச்சிகின்ற சக்திப் படைத்தது. அந்த அமைதி நோய்களை குணப்படுத்துகின்ற வல்லமை வாய்ந்தது.

**எருக்கம்பூ :**
பயத்தை ஒழித்து தைரியத்தை வளர்த்துக் கொள்ளலாம்.

**சம்பங்கிப்பூ**வினால் புதுப்புது திறமைகளை வளர்த்துக் கொள்ளலாம்.

**மகிழம்பூ :**
பொறுமையை கொடுக்கும்.

**சிகப்பு அல்லி :**
செல்வங்களுக்கு தலைவியான மஹா லக்ஷ்மியின் அனுக்கிரகம் கிடைக்குமாறு செய்யும்.

**பவளமல்லியினால் :**
சிறந்த விருப்பங்களை வளர்க்கலாம்.

**மருக்கொழுந்தி**னால் வேண்டாதவற்றை விட்டு விட்டு வேண்டியவற்றை பெற்றுக் கொள்ளலாம். இது புதிய வாழ்வை அளிக்க வல்லது.

## சிவ, மகா புராணம் கூறுதல்

பெரும் செல்வம் விரும்புவோர் தாமரை மலர், வில்வம், சதபத்திரம் ஸங்கபுஷ்பம் ஆகியவற்றால் லக்ஷகணக்கில் பூஜித்தால் சந்தேகமில்லாமல் பெருஞ் செல்வம் கிடைக்கும்.

## அக் கூறு

மலர்களி
சொல்ல
மாலதி ப

**புஷ்பத்**
**பெயர்**

1. மருக்
ளால்
செய்
2. மல்லி
ளால்
செய்
3. ஜாதி
தால்
தால்.
4. அலரி
வந்தி
அர்ச்ச

**மலர்களை மாலைகள**
அர்ப்பணம் செய்வது மலர்கள
மடங்கு பலன் தரும் ஒருவன்
விருந்தோ மலர்களைச் சேகரி
பணித்தால் அடையும் பலன்க
**காட்டும். பிரதேசத்தி**
வந்து அர்ச்சிப்பதால் அடைய

## மேலும் வறுமை

## உதவுவது: கடவு ஏற்ற

1. தீபத்திற்கு நெய்விட்டு ஏ
செல்வ சுகத்தையும் வீட்டி
2. தாமரை தண்டு திரியில் வி
பாவத்தை போக்கும் செல்
3. வடக்கு திசையில் தீபம் ஏ
மங்களமும் ஏற்படும்.

## நாட்டை விட்டு போக

ர ஒவ்வொருவரும் தன் இஷ்ட்ட தெய்வத்தை
னால் அர்ச்சனை செய்ய வேண்டும்.

## ணி புராணம்
## பது

மிகச் சிறந்ததாக
டுவது
மாகி

| ன் | பலன் |
| --- | --- |
| மூர்த்தி ச்சனை | ஆனந்தகரமான வாழ்வை அடைவர். |
| ப் பூவி ச்சனை | எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுவான். |
| பத் சித் | வைகுந்த பதவி. |
| ட் செய் ர்களால் ால். | தெய்வபக்தி நிறைந்தவனாய் விளங்கி வைகுண்டத்தை அடைவான். |

க தொடுத்து பகவானுக்கு
அர்ச்சிப்பதைவிட எண்ணற்ற
சொந்த தோட்டத்தி
வந்து பகவானுக்கு அர்ப்
விட மும்மடங்கு பலனை
லரும் மலர்களை பறித்து
.

## போக

வழிபாட்டின் போது விளக்கு
ல் உள்ள முறைகள்:-
வது மிகச்சிறப்பு சகலவித
லனையும் தரும்.
க்கு ஏற்றினால் முன்வினை
நிலைத்து நிற்கும்.
வைக்க திரண்ட செல்வமும்

4. ஐந்து முகம் வைத்து விளக்கு ஏற்ற செல்வத்தைப் பெருக்கு.
5. வேப்பெண்ணை, நெய், இலுப்பை எண்ணை மூன்றும் கலந்து தீபமிடுவதால் செல்வம் உண்டாகும்.

### மறைந்த பெரியோர்களின் ஆசி பெற:-

ஒருவன் சிரத்தையோடு சிரார்த்தம் செய்வதானால் பிரம்மா, இந்திரன், ருத்திரன், அசுவினி, தேவர், சூரியன், அக்கினி, வசிக்கள், வாயு, பிதுர்க்கள், முனிவர்கள், மனிதர்கள், மிருகங்கள், பறவைகள், சர்ப்பங்கள் மற்றும் பூதங்கள் எல்லாரும் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

**விஷ்ணு புராணம்**

### அன்ன தேவதை கூறுவது என்ன:-

அன்னத்தைப் பிறர்களிக்கும் அன்னதாதா என்னை நூறு மடங்காக பின்னர் ஏற்றுக் கொள்கின்றான். தாதாவை அன்னம் எப்போதும் கைவிடாது. தானமும் செய்து தானும் உண்பவன் ஸமானமாக இருந்து தனத்தை விரும்பினால் அவனை ரக்ஷித்து நிறைய செல்வம் தருகின்றேன்.

ஆபஸ்தம்ப பார்வனா சிரர்த்த பிரயோகம்

ஆகையால் தினசரி முடிந்தவரை அன்னதானம் செய்ய வேண்டும்.

1. காலையில் வாசலில் அரிசி மாவினால் கோலம் போடவும். எறும்புகளுக்கு உணவாகும்.
2. பசுக்களுக்கு கீரை, புல் முதலியவை கொடுங்கள்.
3. உணவிற்கு முன் காக்காய்க்கு சாதம் வையுங்கள் சாப்பாட்டிற்கு பிறகு சிறிது நாய்க்கு உணவு வையுங்கள்.

இனிப்புப் பலகாரங்களை எப்படி சாப்பிட வேண்டும்.

ஒருவர் இனிப்புப் பலகாரங்களை தான் மட்டும் சாப்பிடாமல் உறவினர்க்களுக்கு பகிர்ந்து கொடுத்து சாப்பிட வேண்டும்.

**அக்னி புராணம்**

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் பொருள்களை வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

கல்யாண விசேஷங்களுக்கு:- பருப்பு தேங்காய், அதிரசம், திரட்டிப்பால், சீர்முறுக்கு, தேன்குழல் செய்துத் தரப்படும்.


## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

No. 24, 2-வது மெயின் ரோடு காந்தி நகர்
அடையாறு சென்னை-20 போன் : 412557

திரைவிழாப் படக்கதை — 1



தி... தி... தில்லியிலிருந்.....ந்.....ந்.....து ஜெயமன்மதன். (சே, இப்படியா குளிர் நடுக்கும்?)

பதினொன்றாம் திரைவிழா பனி சூழ்ந்த ஜனவரி பத்தாம் நாள் தொடக்கம். மாலை 5.30. ரிப்பன் வெட்டுப்படும் சம்பிரதாயம். படத்திலிருப்பவர்களை உங்களுக்குத் தெரியாதெனில், மத்திய அமைச்சர் வசந்த்சாத்தே, இந்தியாவைப்பிட்டுப்பிட்டு வைக்கும் சத்யஜித்ரே, மூன்றாமவரை உங்களுக்கு நிச்சயமாகத் தெரியும்.

சாருஹாசன், முக்தா சீனிவாசன், பாரதிராஜா என்று சில பரிச்சய முகங்கள். மற்றபடி வழக்கம் போல வடக்கு ஆட்சி.

விழாக்களமான சிரிஃபோர்ட் (Siri Fort) கம்ப்யூட்டர் கச்சிதத்தோடு இது வரைசெயல்படுவதுஒருசந்தோஷம். ஆடிட்டோரியத்தின் அமைப்பு ஓர் ஆச்சரியம்.

புள்ளி விவரங்களை இங்கேஒரேயடியாக அடுக்குவதை விட அவ்வப்போது தெளித்தால் எளிதாக ஜீரணிப்பீர்கள். கூடவே, வாரம் ஒரு திரைக்கதையைப் பரிமாற உத்தேசம். (அதாவது புரிந்த கதைகள்).

# தேசம் எந்தன் முதல் காதல்

உயர்ந்த மலைகள். அவற்றின் ரகசியங்களைப்போர்த்திமூடியிருக்கும் அடர்த்தியான பசுமை. சமீபத்திய மழையின் சிலீர். தென்றலின் ரகசிய ஹிஸ்.... ஹிஸ்....

டகடக் டகடக்.... டகடக் டகடக்....

பழுப்பு நிறக் குதிரை அமைதிக்கு விடை கொடுத்து வெகு வேகமாகப் பாய்கிறது. சமவெளியில் ஒற்றைப் புள்ளியாய் ஆரம்பித்துப் பெரிதாகிறது. குதிரையின் மீது தால்மே. மாசு மருவில்லாத சருமம். சின்னக் கண்கள். அந்தக் கண்களில் ஓர் எதிர்பார்ப்பு. ஒரு பரபரப்பான துடிப்பு. லகானை இழுத்ததும், பழுப்புக் குதிரை முன்னங்கால்களைத் தூக்கிக் காண்பித்து ஹீய்ய்ங் என்று கனைத்து நிலைகொள்ளாமல் நடமாடியது.

தால்மே தன் செவிகளைக் கூர்மையாக்கிக் கொண்டாள். குதிரை சத்தம் கேட்கவில்லை? போம்தாரி! அவனுடைய வெள்ளைக் குதிரை தான் இப்படி ராட்சஸ வேகத்தில் வரும்.

அவனுடைய புகை படிந்த நினைவு கொஞ்சம் கொஞ்சமாக உருவெடுக்க, அந்த குதிரை சரிவிலிருந்து வெளிப்பட்டது. வெள்ளைக் குதிரை!

"தால்.... மே...."

வெற்றி வாளைத் தூக்கிக் காட்டும் போம்தாரியின் முகத்தில் குதூகலம். போரின் வெற்றி மட்டுமல்ல காரணம். எதிரே நிற்கும் தால்மேயும்தான். வெள்ளைக் குதிரையைப் பார்த்ததும், எஜமான விசுவாசத்தோடு பழுப்பு நிறக் குதிரை அதைநோக்கிப் பாய்ச்சலாய் ஓடியது.

"தால்.... மே...."

"போம்தாரி! போம்தாரி....!"

குதிரைகளிலிருந்து நிலத்தில் குதித்து ஒருவர் கண்ணுக்குள் மற்றவரை சிறிது நேரம் தேடினார்கள்.

"போம்தாரி, நீ இல்லாத மூன்று வருடங்கள் நான் நரகமாய் உணர்ந்தேன். நீ?"

"தால்மே, என் அன்பே, போர் வீரனுக்கு அவனுடைய நாடுதான் முதல் காதலி..."

"இந்தா...."

"என்ன இது?"

"காட்டுப்பூக்கள். வெற்றியோடுதிரும்பிய வீரனுக்கு இந்தக் காதலியின் அன்புப் பரிசு...."

"பூக்கள் மட்டும்தானா?"

"உனக்கு என்ன வேண்டும் போம்தாரி, கேள். அத்தனையும் தர தால்மே தயாராயிருக்கிறேன். அதற்குமுன், நம் திருமணம்...."

"திருமணம்! நான் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டு வயலில் உழுது கொண்டிருக்க, வீட்டில் நீ குழந்தைகளை மேய்த்துக் கொண்டிருக்க, நினைத்தாலே சிரிப்பு வருகிறது.... சந்தோஷச் சிரிப்பு... தால்மே...

ஒன்று நிச்சயம்... நேரமோ, தூரமோ, எந்த எதிரியோ நம்மைப் பிரிக்க முடியாது. பிரிக்கவே முடியாது.....''

''போம்தாரி.... இந்த மூன்று வருடங்கள் நான் எவ்வளவு துன்பப்பட்டுப் போனேன்! வா, ஊரே உனக்காக உற்சாகமாகக் காத்திருக்கிறது....''

''தால்மே, உன் தந்தை இம்தான் எப்படியிருக்கிறார்....?''

''உன்னை ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறார் போம்தாரி....''

அவனுடைய வரவைக் கும்மியிட்டுப் பாடினார்கள். குழுக் குழுவாகத் தாளமிட்டு ஆடினார்கள். ஆட்சி செய்யும் ஜெனரலிடமிருந்து அவனுக்கு அழைப்பு.

''போம்தாரி, போரில் நீ மட்டுமே இருநூறு எதிரிகளுக்கு எமனாய் என்று கேள்விப்பட்டேன்.... உனக்குப் பதவி உயர்வு தரத் தீர்மானித்துவிட்டேன்.''

''மண்டியிடுகிறேன் பிரபு. நம் நாட்டைக் காப்பாற்ற வானவில் கண்ணாடி இருக்கும் வரை எந்தப் பகைவனாலும் நம்மை ஒன்றும் செய்ய முடியாது.''

''ஆம்! வானவில் கண்ணாடி... இப்போது பகைவர்களுக்கு அதுதான் முதல் எதிரி. அதை அழித்துவிட எத்தனையோ முயற்சிகள் நடக்கின்றன. அதைக் காவல் காக்க, நம் படையின் மிகச் சிறந்த வீரர் இம்தானை நியமித்திருக்கிறேன். இம்தானின் மகள் தால்மேயை நீ திருமணம்.... அட என்ன வெட்கம் உனக்கு?''

''விடை கொடுங்கள் பிரபு....''

போம்தாரி மண்டியிட்டான். எழுந்து அவருக்கு முதுகு காட்டாமல் பின்புறமாய் நடந்து வெளியேறினான். குதிரையில் பாய்ந்தான்.

எத்தனை நாளாயிற்று வானவில் கண்ணாடியைப் பார்த்து!

மூன்றுக்குக் கீழே கனத்த கதவுகளுக்கு வெளியே இம்தான் கண் அயராத காவலில் இருந்தார்.

''போம்தாரி, வா, வீரனே....!''

''வணங்குகிறேன்.... எனக்குப் பதவி உயர்வு அளிக்கப்பட்டிருக்கிறது இம்தான்.''

''நான் எதிர்பார்த்ததுதான்.... சீக்கிரமே உனக்கு இன்னொரு பதவி தர, நாள் குறிக்கச் சொல்லிவிட்டேன். பதினைந்தாம் தேதி தால்மே உன்னுடையவளாவாள்....''

''இம்தான், எனக்கு வெகு நாட்களாய் ஒரு சந்தேகம். இந்த வானவில் கண்ணாடி நமக்கு எப்படிக் கிடைத்தது?''

''எப்படிக் கிடைத்தது என்ற விவரம் எனக்கும் தெரியாது. ஆனால் நம் நாட்டின் பாதுகாப்புக்குக் கடவுள் கொடுத்த வரம் அது. குன்றின் உயரத்தில், அதன் மகா உச்சியில் அந்தக் கண்ணாடியை நிறுவியிருக்கிறோம். சுற்று வட்டாரத்தில் எங்கே பகைவர்களின் படை திரண்டாலும், ஓர் எச்சரிக்கை போல வானவில் கண்ணாடி நெருப்பு ஜ்வாலைகளாகப் பிரதிபலிக்கும். நாம் உடனே தயாராகிப் படையோடு போய்ப் பகைவனை அழிப்போம். நம்முடைய இந்தப் பொன்னான நாட்டைக் காவல் காக்க எனக்கு உரிமை அளிக்கப்பட்டதில் எனக்கு எத்தனை பெருமை!''



''பெருமை!'' அரக்கன் போல் சிரித்தான், மியோங் சன். சிரித்த இடம் பகைவர்களின் முகாம். ''நாம் இங்கே முகாம் போட்டால் அவர்களுக்கு உடனே சேதி சொல்



டாக்குமெண்ட்டரிப் படங்களையும் தவாரஸ்யமாய் எடுக்க முடியும் என்பதற்கு ஆஸ்திரேலிய டைரக்டர் Dennis O' Rourke வின் HALF LIFE ஓர் உன்னதமான அத்தாட்சி. அணு ஆயுதங்களை வைத்து வல்லரசுகள் எப்போது சாவி கொடுத்து விளையாட ஆரம்பிக்குமோ என்ற நித்திய கவலையின் ரேகைகள் இந்த 86 நிமிஷப் படத்தில் தென்படுகின்றன. அணு சோதனைக்கு உட்பட்ட ஒரு தீவு, வருடங்கள் கழிந்தும் அதன் மனிதர்களைத் துரத்தும் கொடிய நோய்கள், அழிந்து போகும் ஜீவராசிகள், பொசுங்கிப் போகும் இயற்கை வளங்கள் — படம் முடிந்தபின் தூய ஆக்ஸிஜனைத் தேடி நம் நுரையீரல்கள் துடிக்கின்றன. எப்படி இந்த மாதிரி உங்களால் படம் பண்ண முடிந்தது என்று கேட்ட போது, அவர் சொன்ன பதில்: "I do not make films, films make me."

கிறது அந்த வானவில் கண்ணாடி. அதைத் தகர்த்தால்தான் நமக்கு வாழ்வு. அதைப் பெயர்த்து உடைத்துத்தூள் தூளாக்க உடனே ஏற்பாடுகள் செய், தளபதி...."

தளபதி மண்டியிட்டான்: "பிரபு, ஏற்பாடுகள் செய்துவிட்டேன். இந்நேரம் ஜெனரலின் மனைவியை வழிப்பறி செய்வது போல் நம் ஆட்கள் நாடகம் ஆடுவார்கள். தக்க நேரத்தில் அங்கே போன்சன் எதிர்ப்படுவாள். வழிப்பறி ஆட்கள் அவளிடம் தோற்றது போல் ஓட்டமெடுப்பார்கள். நமது போன்சன் ஜெனரலின் மனைவியைக் 'காப்பாற்றி' அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாவாள்... ஜெனரலுக்குக் குழந்தையே கிடையாது... எனவே நமது போன்சனை வளர்ப்புமகளாக அவர்கள் எடுத்துக்கொண்டால்கூட ஆச்சரியமில்லை."

"போன்சன்.... இளமை ததும்பும் சாகசக்காரி! அவள் மட்டும் ஜெனரலின் வீட்டிற்குள் புகுந்துவிட்டால் நம் காரியங்கள் சுலபமாகிவிடும்...."

"போன்சன், என் கண்ணே, உனக்கு நான் என்ன பரிசு தர முடியும்?" ஜெனரலின் மனைவி உணர்ச்சியோடு தன் புது வளர்ப்பு மகளை அணைத்துக் கொண்டாள்.

"என் அரசியே, இந்த ஏழைக்கு ஒரே ஒரு ஆசைதான்...." போன்சன் தன் விழிகளில் குழந்தைத்தனத்தைக் கொண்டு வந்தாள். 'வானவில்' கண்ணாடியை நான் பார்வையிட வேண்டும்...."

"வானவில் கண்ணாடியா? அங்கே செல்ல யாருக்கும் அனுமதி கிடையாதே. அந்தக் குன்றைக் காவல் காத்து வரும் இம்தான், நாட்டின் விசுவாச வீரர்."

"ஜெனரலின் மனைவிக்குக் கூடவா அனுமதி கிடையாது? சரி போகட்டும், பெரிய விஷயங்களுக்கு இந்த ஏழை ஆசைப்படலாமா?" கண்களைக் கசக்கினாள்.

"அப்படிச் சொல்லாதே, போன்சன், என் கண்ணே.... வா, எதற்கும் முயற்சி செய்வோம்."

இம்தான் பணிவோடு ஆனால் மிகப் பிடிவாதமாக "அனுமதி இல்லை, ராணுவ உத்தரவு...." என்று அவர்களைத் திருப்பி அனுப்பிவிட, போன்சன் உள்ளுக்குள் தீ வளர்த்தாள். 'இம்தான் உன்னை முதலில் ஒழிக்கிறேன்.'

பதினைந்தாம் தேதி. விடிந்தால் கல்யாணம்.தால்மேயைத் தோழிகள் சீண்டிக் கொண்டிருந்தனர்.

வானவில் குன்றின் கீழே, தன் காவல் நேரம் முடிந்து புறப்பட இம்தான் தயாராகிக் கொண்டிருக்க, போன்சன் அங்கே வந்து நின்றாள்.

"கதவைத் திறவுங்கள். ஜெனரலுக்குச் சாப்பாடு எடுத்து வந்திருக்கிறேன்."

"இங்கேயே காத்திரு. யாரையும் மேலே அனுமதிக்க எனக்கு உரிமையில்லை. ஜெனரல் தானே கீழே வருவார்..."

போன்சன் சாப்பாட்டைத் தூர எறிந்தாள். தன் சட்டையைக் கிழித்துக் கொண்டாள். காதணி ஒன்றைக் கழற்றித் தூர எறிந்தாள். தடாலென்று கீழே விழுந்தாள். "காப்பாற்றுங்கள்.... காப்பாற்றுங்கள்...."

கதவு திறந்தது. ஜெனரலும் இன்னொரு வீரரும் எதிர்ப்பட்டார்கள். அவர்கள் கண்களில் குழப்பம்.

"என்ன இங்கே கூச்சல்?"

"அப்பா....." போன்சன் தன் வளர்ப்புத் தந்தையிடம் ஓடினாள். "உங்கள் காவல் வீரர் இம்தான் என்னை அவமானப்படுத்தி, மேலே விழுந்து என் உடைகளைக் கிழித்து... அப்பா.... அப்பா...." அழுகையுடன் வார்த்தைகள் கலந்து வந்தன.

"பொய்... அவள் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் பொய்" இம்தான் பதறினார். "பொய் சொல்லும் அந்த நாக்கை இப்போதேதுண்டிக்கிறேன்" என்று கத்தியை உருவினார்.

"எவ்வளவு தைரியம் இருந்தால் என் வீட்டுப் பெண் மீது கத்தியை வீச முயற்சி செய்வாய்!" ஜெனரல் சரேலென்று தம் வாளை வீசினார். இம்தானின் உச்சந்தலையில் சிவப்பாய்க் கோடு உழுது ரத்தம் கொப்புளித்தது. கையிலிருந்து கத்தி நழுவிற்று.

"பிரபு... வானவில் கண்ணாடியைப் பகைவர்களிடமிருந்து காப்பாற்று....ங்...க...ள்."

இம்தானின் அத்தனை காலத்து, நேர்மையான, வீரமான, விசுவாசமான மூச்சு நின்றது.

சேதி வந்ததும் மண வீடு மின்சாரத்தால் தாக்கப்பட்டதுபோல் துடித்தது.

"ஏதோ சதி நடந்திருக்கிறது. தால்மே, நீ அம்மாவை அழைத்துக் கொண்டு உடனே தப்பிப் போ. நான் இருந்து என்ன ஏது

என்று ஆராய்கிறேன்..."

மணமகனும் வந்த போம்தாரி இப்போது வேறு கடமைகளில் அவசரமாய் ஈடுபட்டான். அவனைக் கைது செய்யவும் ஆள் தேடி வந்தது. அவன் நேரே ஜெனரலின் முன் சென்று மண்டியிட்டான்.

"நான் என்றைக்கும் உங்கள் விசுவாச ஊழியன், பிரபு...."

"உண்மையாகவா?"

"நாட்டின் ஒவ்வொரு மண் துகளின் மீதும் ஆணையாக...."

"மகிழ்கிறேன். என் வளர்ப்பு மகள் போன்சனைத் திருமணம் செய்து கொண்டு இந்த நாட்டின் தளபதியாகலாம் நீ...."

"நன்றி, பிரபு...."

"வானவில் கண்ணாடிக்கு இன்றிலிருந்து நீதான் காவல்...."

"அத்தனை திட்டமும் பாழ்" பதறினான் மியோங்சன். "இன்றிலிருந்து போம்தாரி தான் காவலாம்...."

"இருந்துவிட்டுப் போகட்டும். அவனை ஒரு பழி சுமத்திச் சிறைக்குள் தள்ள போன்சன் திட்டமிட்டிருக்கிறாள். அதன் பின் வீர விளையாட்டுகள் நடைபெறும் நாளில் போட்டியில் எவன் ஜெயிக்கிறானோ அவனே வானவில் கண்ணாடிக்குக் காவல் நிற்கத் தகுதியுள்ளவனாவான். நம் ஆளை அப்போட்டியில் கலந்து ஜெயிக்க வைப்போம்" என்று சமாதானம் சொன்னான் பகை நாட்டுத் தளபதி.

"அப்புறம் அவர்கள் நாட்டிற்குள் எந்த எச்சரிக்கையும் இல்லாமல் நாம் படையெடுத்து நுழைவோம்!" தொடைகளைத் தட்டி மியோங்சன் சிரித்தான்.

சலசலத்து ஓடும் தண்ணீரில் தோய்த்துப் பக்கத்துப் பாறையில் வாளைக் கூர் செய்து கொண்டிருந்தாள் தால்மே. அவள் கண்களில் கனவு கலந்து ஒரு வெறி கும்மாளமிட்டது.

"தால்மே, அங்கே என்ன செய்கிறாய்?"

"போன்சன் எனும் நச்சுப் பாம்பை இனியும் நடமாட விடக் கூடாது, அம்மா! போம்தாரியை அவள் வஞ்சித்துச் சிறைக்கு அனுப்பிவிட்டாள்! நான் பெற்ற பயிற்சிகள் எதற்காக? வீர விளையாட்டுப் போட்டியில் கலந்து கொண்டு நான் ஜெயிக்கப் போகிறேன்! அப்புறம் நான்தானே வானவில் கண்ணாடிக்குக் காவல்....!"

"நீ பெண்.... தவிர ஊருக்கு ஒளிந்து வாழ்பவர்கள் நாம்..."

"நான் பயப்படவில்லை அம்மா. நம் நாட்டின் பாதுகாப்பைவிட, என் உயிர் மேலானது என்று நான் நினைக்கவில்லை."

போட்டி நடைபெறும் நாளில் தால்மே ஆண் வேடமிட்டிருந்தாள். அம்பு எறிவதில் கச்சிதமான குறிகளால் நிறைய மதிப்பெண்கள் பெற்று வரும் நேரம், அவளுக்கு அந்த ஆச்சரியம் காத்திருந்தது.

அவளுடைய போம்தாரி அங்கே எதிர்ப்பட்டான்.

"தால்மே, என்னை ரகசியமாய்ச் சிறையிலிருந்து நாட்டின் நலனில் அக்கறை உள்ளவர்கள் வெளியே கொண்டு வந்துவிட்டார்கள். நான் இங்கே கவனித்துக் கொள்கிறேன். நீ வானவில் கண்ணாடியைப் பாதுகாக்கப் போ...."

போம்தாரியை அந்தக் கூட்டத்தில் பார்த்தவள் தால்மே மட்டுமில்லை. போன்சனின் பாம்பு விழிகளிடமிருந்து அவனது மாறுவேடம் தப்பவில்லை.

நாட்டின் வீரர்கள் வீர விளையாட்டில் ஈடுபட்டிருக்க, குன்றின் கீழ் காவல் நூல் போல் மெலிந்திருந்தது. போன்சன் வெகு சுலபமாக அவர்களைத் தகர்த்து எறிந்தாள்.

குன்றின் உச்சியில் இருந்த வானவில் கண்ணாடி அவளை 'வா வா' என்றது.

"நில்!"

போன்சன் அதிர்ச்சியோடு திரும்பினாள். தால்மே!

சரேலென்று தால்மேயின் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பிலிருந்து குனிந்து விடுபட்டாள். விஷம் தோய்த்த கூர்வாளைத் தால்மேயை நோக்கி எறிந்தாள். தால்மே அதைக் கோழிக் குஞ்சு போல் கருதி கையால் பிடிக்க, தசை பிளந்து, ரத்தம் கசிந்து, அதில் விஷம் கலந்தது. காயத்தைப் பொருட்படுத்தாமல் தால்மே தன் குத்துவாளை 'விர்க்'கென்று எறிய, அது வஞ்சக போன்சனின் தீய மூச்சுக் குழாயை வெட்டிக் குத்தி நின்றது.

விளையாட்டில் வாகை சூடிப் பகை நாட்டு ஒற்றர்களை வீழ்த்திவிட்டு போம்தாரி துடிப்பாய்க் குன்றுக்கு ஓடி வந்தபோது....

தால்மே நீலம் பாரித்திருந்தாள். காதலனுடைய மடியில் பிரிவதற்காகக் கடைசி மூச்சு காத்திருந்தது.

கண்களில் காதலோடு சேர்ந்து வீரமும், பெருமையும் பெருகின. கொஞ்சம் ரத்தமும் கசிந்தது.

"தால்மே... என் தால்மே..."

போம்தாரியின் அலறல் காயப்படாத வானவில் கண்ணாடியில் பட்டு மலைப் பிரதேசம் எங்கும் எதிரொலித்தது.

— ஜெயமன்மதன்

DALMAE and POMDARI எனும் இந்தக் கொரியப் படம் திரையில் ஓடும் 83 நிமிஷங்களும் இந்திய சினிமாவில் உட்கார்ந்திருந்த பிரமை ஏற்பட்டது. கதையின் அமைப்பு அப்படி. இதன் டைரக்டர் Yun-Ryong-Gyu, இப்பட விழாவில் கலந்து கொள்ள இருந்தவர், டிசம்பர் இறுதியில் இறந்தது ஒரு துர்ச்சம்பவம்.

இயற்கையை, அதன் ரகசியத்தை, அதன் விஸ்தீரணத்தைக் காமிராவில் துல்லியமாகச் சிறைப்படுத்திய Pak Gyong Won க்கு: "ஜமாய்ச்சுட்டீங்க, சாரே!"

# கண்கவர் தோற்றத்திற்கு

# என்டெக்ஸ்®

ஆடைவகைகள்
100% பாலியஸ்டர்
பாலியஸ்டர் பிளண்ட்ஸ் மற்றும் காட்டன்

**சிறந்த ரகங்கள் சரியான விலை**

---

**நேஷனல் டெக்ஸ்டைல் கார்ப்பொரேஷன்**
(தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி) லிமிடெட்
ஒரு மத்திய அரசு நிறுவனம்
1064 சோமசுந்தரம் மில்ஸ் ரோடு, கோயமுத்தூர்-641009

**உங்கள் அருகாமையிலுள்ள**
**எங்கள் ஷோரூமிற்கு விஜயம் செய்யுங்கள்**

அதிகாரபூர்வமான ஏஜெண்டுகள்: தமிழ்நாடு: மெஹர் ஏஜென்ஸீஸ்,
89, கோடௌன் தெரு, சென்னை-600 001,
கோத்தாரிஸ் டிரஸ்ட், 120 தெற்கு மாசி தெரு, மதுரை-625 001.

14

# மோகம் என்பது இதுதானோ?

மகளின் குரல் ஒலிபெருக்கி மூலம் நாலாபுறமும் ஒலிப்பது கேட்டு ஞானத்தின் மனம் புல்லரித்தது. 'நான் பெற்ற மகளின் குரலுக்கா இத்தனை சக்தி' என்று உள்ளுக்குள் மாய்ந்து போனாள். "நீ அதிர்ஷ்டம் பண்ணி யிருக்கே புவனா, எங்க அம்மாக்களையெல்லாம் போல் பொண்ணு என்றாலே மூலையிலே ஒக்கார வைக்கணும்னு நினைக்காம, உங்க அப்பாவையும் எதிர்த்துக்கிட்டு உனக்காக நான் எவ்வளவு செய்யறேன் பாரு!" என்று தானே பலமுறை கூறிக் கொண்டாள். அம்மா இப்படிப்பேசும்போதெல்லாம்புவனாவும், அம்மா தனக்காக, தன் வளர்ச்சிக்காக என்னவெல்லாம் செய்கிறாங்க என்று எண்ணித் தாயின் நெஞ்சுடன் அணைத்துக் கொள்வாள்.

"யாருங்க பொண்ணு, கொரல் ஜானகி மாதிரி இருக்கே...." என்று குரலினிமையை அடையாளம் கண்டு கொள்ளத் தெரிந்த ஒருவர் கேட்டால், உடனே தமிழ்ச் செல்வனின் மனைவி செல்வி பெருமையுடன், "எல்லாம் எங்க வீட்டுக்காரர் கண்டுபிடிப்புங்க.... புதுமுகம். எங்க ஊர் தேசிகர் மகளுங்க..." என்பாள்.

கிராமங்களில் கோயில் ஓதுவார்களைத் தேசிகர்கள் என்று அழைப்பார்கள் என்று அறியாத அந்த நகரவாசி, "ஓ.... தண்டபாணி தேசிகர் மகளா, குரலைக் கேட்டே நினைச்சேன்...." என்று தலையாட்டுவார். தண்டபாணி தேசிகர் இறக்கும்போது இந்தப் பெண் பிறந்திருக்கவே மாட்டாள் என்பது கூட அவருக்குத் தோன்றாது.

ஒரு கட்சிக் கூட்டத்துக்கு நடிகர் ரஞ்சித் வந்த சமயம். புவனா வாழ்த்துப்பாக்கள் பாடி முடித்து மேடையிலிருந்து இறங்கியிருந்தாள். "ரஞ்சித் அண்ணே வர்றாரு... வர்றாரு..." என்ற சத்தத்தைத் தொடர்ந்து கூட்டம் நெருக்கி அடித்துக் கொண்டு முன்னேறியது. நடுவே, "ஐயோ, எங்குழந்தை" என்ற ஓலம் எழுந்தது. ஆனால், போதை ஏறிய மக்கள் கூட்டம் அலறலைச் செவிமடுக்காமல் "ரஞ்சித் அண்ணன் வாழ்க" என்று கோஷமிட்டபடி ரஞ்சித்தை நெருங்க முயன்றது. காவல் துறையினர் அவசர, அவசரமாகத் தங்கள் தடிகளை ஒன்று சேர்த்துச் சுவர் அமைக்க முயன்றனர். காவல் துறை உயர் அதிகாரி மக்களை அமைதியாக இருக்குமாறு மேடை ஏறி அறிவிப்பு விடுத்தார். நினைவெல்லாம் ரஞ்சித்தே நிரம்பியிருந்த கூட்டம் அவர் வேண்டுகோளைச் செவி மடுக்கவில்லை. பூமாலைகளும், பழங்களும் மேடையை நோக்கி வீசப்பட்டன.

முதலில் இந்த ஆரவாரத்தால் களிப்படையத் துவங்கியிருந்த புவனா, நேரம் செல்லச் செல்லப் பீதியுற்றாள். அம்மாவையும் அருகில் காணோம். கூட்டம் முண்டியடித்தால், மேடைக்கு வெகு அருகிலிருந்த அவள் நசுக்கப்படுவாள்... அவளுக்கு மிகவும் பயமாக இருந்தது...

நல்லவேளை இதற்குள் மேடையேறியிருந்த ரஞ்சித் மைக் முன் நின்று, "என் இனிய தம்பிகளே... நான் பூசிக்கும் தாய்க்குலமே... ரசிகர்களே...." என்று அழைக்கவும், 'வாழ்க' வானைப் பிளக்க, கூட்டம் ஒருவாறு அமைதிப்பட்டது.

சின்னாபின்னமாக நசுங்கிய குழந்தையைக் கையில் அள்ளி, அதன் அழுகைக்கு மத்தியிலும் ஆசையினால் மேடையிலேயே கண் பதித்திருந்த ஒரு தாய்க் குலத்தை, போலீஸார், பிறர் கவனிக்குமுன் வெளியே பலாத்காரமாக நகர்த்திச் சென்றனர்.

இப்போது புவனா மேடையைப் பார்த்தாள். ரஞ்சித் அண்ணன் படத்தில் பார்ப்பதைவிடவும் நேரே பார்க்க இன்னும் அதிக அழகாகவும், ஸ்டைலாகவும் இருந்தார். இவரைப் பற்றி லோகு அவளிடம் ரகசியமாக நிறைய விஷயங்களைக் கூறியிருந்தாள். அத்தான், இந்த அண்ணன் திருமணத்துக்குக் காத்துக் கொண்டிருப்பதால்தான், அவர் திருமணத்தையே ஒத்திப் போட்டிருக்காராம். நித்யா அத்தானை இவர் வீட்டுக்கு அழைத்து விருந்தெல்லாம் கொடுப்பாராம். தான தர்மம் என்றால் வாரி வாரி வழங்குவாராம். லோகு, தன் கம்மல் ஜிமிக்கியை அத்தானின் ரசிகர் மன்றத்துக்குத் தாரை வார்த்தது தவிர, மற்ற எல்லா விஷயங்களையும் தங்கையிடம் கூறியிருந்தாள். எனவே புவனா ஒரு பக்தனின் தீவிரத்துடன் அவரைப் பார்வையால் வழிபட்டாள்.....

"அம்மாடி... கூட்டத்திலே நல்லாவே மாட்டிக்கிட்டேன்...." ஞானம் தலைபறக்க, நெற்றிக் குங்குமம் கலைய, உடம்பெல்லாம் அழுக்குடன் புவனாவின் அருகில் வந்து நின்று கொண்டாள். அவள் பார்வை ரஞ்சித்தின் மேலேயே பதிந்திருந்தது. "அண்ணன் நல்லாவே இருக்காரில்ல...."

இப்போது அவருடன் நெருங்கியபடி வந்த

நடிகை மேல் புவனா பார்வை படிந்தது. "அது ஆரும்மா அண்ணன்கூட.... அவங்களும் ஆரோ பார்த்த முகமாத் தெரியுதே..." ஞானத்திற்கும் ஜரிகையும், நகையுமாகப் பளிச்சிட்டுக் கொண்டிருந்த அந்தப் பெண் யாரென்று புரியவில்லை.

இவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு பெண்மணி, "என்னக்கா, அது நம்ம சின்ன அண்ணி, நடிகை ஸ்ரீ ஜெயாங்க."

"சின்ன அண்ணின்னா... ரஞ்சித் அண்ணனோட அண்ணியா.... தெலுங்கு நடிகையில்ல அவங்க?"

"ஆமாங்க. தெலுங்கு நடிகைதான். அண்ணனோட அண்ணியில்லீங்க... அவருக்கேதான்... வைப்புங்க... பெரிய அண்ணியைத் தனியா வச்சிருக்காரு. ரெண்டு பேத்துக்கும் ஒத்து வர்றதில்லே...."

புவனா படபடத்தாள். "ஏம்மா, அத்தானுனால் ரஞ்சித் அண்ணன் கலியாணத்துக்காகக் காத்திருக்காரு. இவங்க பெரிய அண்ணி, சின்ன அண்ணின்னு என்னென்னமோ சொல்றாங்க..."

அந்தப் பெண்மணி புவனாவைப் பார்த்துச் சிரித்தாள். "யாரு சொன்னாங்க, அண்ணனுக்குக்கலியாணம் ஆகிவிட்டதாக... இப்பக்கூட ஒரு பேட்டியிலே, சினிமாவுடன் சம்

## உஷா சுப்பிரமணியன்





கல்வியில் கணக்குக்கு எவ்வளவு முக்கியத்துவம் தந்திருக்கிறோம்? வாழ்க்கையிலும் தரவேண்டும். இப்போது செலவுக் கணக்கு மட்டும்தான் முக்கியமாயிருக்கிறது. எல்லா ஆபீசிலும் அக்கவுண்ட் ஸெக்ஷன், அது தவிர அக்கவுண்டண்ட் ஜெனரல் ஆபீஸ்கள் என்றே நிறைய இருக்கின்றன. பழைய காலத்திலிருந்து இப்படி ராஜாங்க ரீதியாக வரவு — செலவுக் கணக்குகளைக் கணக்குப் பார்க்கும் ஏற்பாடு இருந்து வந்திருக்கிறது. "பெருங்கணக்கு" என்றமாதிரி 'சிறு கணக்கு' இல்லை. இந்தச் சின்ன உத்தியோகத்துக்குத்தான் 'கணக்கப் பிள்ளை' என்று பெயர். 'பிள்ளை' என்பது இங்கே 'சிறிய', 'சின்னது' என்பதைக் குறிக்கும். பிள்ளை ஜாதி இல்லை. தென்னம் பிள்ளை, அணிற் பிள்ளை என்றெல்லாம் சொல்கிறபோது சின்னதைத்தானே குறிக்கும்? அப்படியே கணக்குப்பிள்ளை என்கிறவர் ராஜாங்க வரவு செலவு பார்ப்பவர்களில் சிறிய ஊழியர். ஆனால் அவருக்கு எல்லா நுணுக்கமும் தெரிந்திருக்கும். அதனால்தான் முன்னெல்லாம் ஜில்லா கலெக்டராக ட்ரெயினிங் பண்ணுகிறவன் கூடக் கணக்குப் பிள்ளையிடம்தான் வேலை கற்றுக்கொள்ள ஆரம்பிக்க வேண்டுமென்று வைத்திருந்தார்கள்.

இப்போது இதெல்லாமே பேப்பரில் (வரவுக்குச் செலவு) ஸரி கட்டுவதாகக் காட்டி விட்டால் போதுமென்று ஆகிவிட்டது. ஃபைனான்ஸ் மினிஸ்டரைப் பார்த்தால் அப்படி ஸரி கட்டாவிட்டால் கூடப் பரவாயில்லை, டெஃபிஸிட் ஃபைனான்ஸிங் (ரூபாய்) நோட்டுப் போட்டும், ஊரெல்லாம், உலகமெல்லாம் கடன் வாங்கியும் ஸரிக் கட்டினதாகக் காட்டினால் போதும் என்றாகிவிட்டது' என்று சொல்லிக் கொள்கிறார்கள். மொத்தத்தில் இப்போது நவீன முறை என்று சொல்லி, கணக்கில்லாமல் ஆசைகளையும், தேவைகளையும் பெருக்கி, அதற்காகச் செலவையும் பெருக்கி, மக்களையெல்லாம் கடனாளிகளாகவும் நிம்மதியில்லாதவர்களாகவும் செய்திருப்பதாகத் தெரிகிறது.

தேவை, வரவு, செலவு எல்லாவற்றிலுமே இப்படியில்லாமல், நாம் அவற்றை ஒரு கணக்குக்குக் கீழே கொண்டு வர வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்.**

பந்தப்படாத, குடும்பப்பாங்கான, அவங்க பெற்றோர் பார்த்து வச்ச பெண்ணைத்தான் கட்டிப்பேன்னு சொல்லியிருக்காரே... சினிமா நடிகருன்னு விளக்கு மத்தியிலே சூட்டுலே நடிக்கணும். பொம்பளைங்களைக் கட்டிப் பிடிச்சு ஆடணும்.... அதுனால அங்க, இங்க தொகுப்பு இருக்கத்தான் செய்யும். அப்படித் தொகுப்பு வர்ற ஒவ்வொருத்தரையும் அண்ணன் கட்டிக்கிட முடியுமா என்ன? உனக்கு இதெல்லாம் புரிஞ்சிக்க வயசு பத்தாது. நீங்க என்ன சொல்றீங்க?" ஞானத்தை நோக்கிக் கேட்டாள்.

ஞானம் பதில் பேசவில்லை. ஆனாலும், அவள் அடிமனத்தில் ரஞ்சித்தின் கவர்ச்சி ஏற்படுத்திய பாதிப்பு சற்றே குறைந்தது. ரஞ்சித்தின் இந்த அண்ணி விவகாரங்கள் தன் மகளுக்கு இழைக்கப்படும் நேரடித் துரோகமாகவே அவளுக்குத் தோன்றியது. இந்தப் பெரிய, சிறிய அண்ணிகளில் எவள் கழுத்திலாவது இந்தக் கதாநாயகன் தாலி கட்டித் தொலைக்கக் கூடாதோ, லோகுவுக்காவது வாழ்வு கிடைக்குமே...!

ஒரு வாரம் என்பதுதான் எவ்வளவு வேகமாக ஓடிவிட்டது. இன்று அவர்கள் அனைவரும் மாலையில் பஸ்ஸில் ஊர் திரும்புகிறார்கள்.

கூட்டத்தில் கோஷமிட வந்தவர்களுக்குத் தலைக்கு நூறு ரூபாய் தரப்பட்டது. விழாவின் வேகம் குறைந்த நிலையில் சன்மானத்தைப் பற்றிய கண்டனங்கள் பயங்கரமாக எழுந்தன. ஒரு வாரமாக, அண்ணன், தம்பி, தங்கச்சியாக ஒரு குடும்பமாகப் பழகியவர்கள், இப்போது எலியும் பூனையுமாக அடித்துக் கொண்டனர். அக்காக்களும், அம்மாக்களும் நடுச்சந்திக்கு இழுக்கப்பட்டனர்.

"ச்சு.... அந்தப் பேச்செல்லாம் நீ காதுல கேக்காதேடி... அதுல நமக்குச் சம்பந்தமில்லை...." என்று சுவாரசியமாக இந்த வசவுகளை ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்த புவனாவை அறைக்குள் இழுத்தாள் ஞானம். "பணங்காசுன்னு அண்ணன், தம்பி, உறவு கூட இல்லை பிளவுபட்டுடுது.... ச்சு...."

"வாத்யார் வூட்டம்மா... நீங்க கொஞ்சம் வர்றீங்களா... நம்ம தலைவரு உங்களைத் தனியே பார்த்துச் சன்மாம் தரணும்னாரு. பாப்பா பாட்டுலே அவங்களுக்கெல்லாம் பெரிய கவர்ச்சியே ஏற்பட்டுடிச்சு. இப்ப ரொம்பச் சின்னப் புள்ள... இன்னும் ரெண்டு வருஷம் போகட்டும்... என் படத்திலேயே ப்ளே — பாக் சான்ஸ் தர்றேன்னாரு... கிளம்புங்க...."

"புவனா.... மந்திரி ஐயாவை பார்க்கப் போறம்டீ... கெளம்பு சீக்கிரம்...." ஞானம் குரலெடுத்துக் கத்தினாள்.

"அட... மத்தவங்க காதுல விழப் போவுறது. பொறாமைப்படுவாங்க.... பாப்பா இங்கியே இருக்கட்டும்... நீங்க வந்தாப் போதும்...."

"இல்லைங்க... இங்க சண்டை, பூசல், பேச்செல்லாம் அவ கேட்க வேணாம்..." ஞானம்

** கடவுளை வெறும் படமாக எண்ணி வழிபடாதே; படத்தைக் கடவுளாக நினைத்து வழிபடு. இது படிப்படியாகக் கடவுளை உனக்குக் காண வழிவகுக்கும்.

பேச்சை முடிப்பதற்குள் புவனா ஓடிச் சென்று தமிழ்ச்செல்வன் அழைத்துவந்திருந்த கட்சிக் கொடி பறக்கும் டூரிஸ்ட் வண்டியில் ஏறிக் கொண்டாள்...

'இது ஏதடா சங்கடம்' என்பதுபோல் பார்த்த தமிழ்ச் செல்வன், "சரி, வாங்க..." என்று கிளம்பினான்.

அமைச்சர் வீட்டில் வாயிலிலேயே நிறையக் கூட்டம் காத்திருந்தது. ஆனால் தமிழ்ச் செல்வன் அனைவரையும் தாண்டி இவர்களை உள்ளே அழைத்துச் சென்றான். இவர்களைக் கண்டதும் அமைச்சரின் அலுவலர்களும் அறையைவிட்டு வெளியேறினர்.

நல்ல உயரமாக, கறுப்பாக, கரளை, கரளை யான உடம்புடன் இருந்த அமைச்சர், மேலே சட்டை போடாமல் துண்டு மட்டும் போர்த்தியிருந்தார். கழுத்து மார்பெல்லாம் முடி பரவிய அவர் தோற்றம் புவனாவுக்குக் கரடியை ஞாபகப்படுத்தியது. அவள் சிரிப்பை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

அமைச்சர் தம் இருக்கையிலிருந்து எழுந்து புவனாவின் இரு தோள்கள் மீதும் கைபோட்டு அவள் முடியைக் கோதிவிட்டார். "நல்லாவே பாடறே கொழந்தை... நீ பெரிய பாடகியாக நான் உத்திரவாதம் தர்றேன்...."

ஞானத்தைப் பார்த்து "நீங்க குடுத்து வச்சிருக்கீங்கம்மா. ஆனா இதைப் போலக் கொழந்தையைப் பெத்துட்டு எங்கேயோ நாட்டுப்புறத்துலே உட்கார்ந்திருந்தா எப்படி.... நம்ப தம்பி ரொம்ப சொல்லிச்சு, பாப்பாவுக்குப் பட்டணத்துக்கு வர்றுப்பல ஏதாவது ஏற்பாடு செய்யுங்கன்னு... உங்களுக்குச் சம்மதம்தானே...."

ஞானம் ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

"இயல், இசை, நாடகக் குழுவோட பேசிப் பார்க்கிறேன். கலை வளர்ச்சிக்கு என்னாலான சேவை.... தம்பி.... இவங்களுக்குச் சன்மானத் தட்டெங்க? எடுத்தா..."

தமிழ்ச் செல்வன் உள்ளே ஓடினான். அவன் அளித்த தட்டை அமைச்சர் ஞானத்திடம் நீட்டினார். "விழுந்து கும்பிடு..." அவள் புவனாவை அதட்டினாள்.

"நீங்க வாங்கிக்கோங்க... இது அருமையாகக் குழந்தை வளர்த்த தாய்க் குலத்துக்குச் சன்மானம்..." தட்டைப் பற்றிய ஞானத்தின் இரு கைகளையும் சேர்த்துப் பற்றினார் ம.ரா. அவள் நகரவே முடியாதபடி அவர் கரம் அழுந்தியிருந்தது.

ஓர் அன்னியனின் ஸ்பரிசம் ஞானத்தைப் புழுவாக நெளிய வைத்தது.

அமைச்சர் கையைத் தளர்த்தினார். "எது வேணுமோ தயங்காம கேளுங்க... தம்பி காதுல ஒரு வார்த்தை போடுங்க போதும்... என்ன....

தமிழ்ச் செல்வன் சைகையை மீற முடியாமல் தானும் அரை மனத்துடன் அமைச்சரின் காலில் விழுந்து எழுந்தாள் ஞானம்... அவரும் அன்புடன் அவளைத் தூக்கி வாழ்த்தினார்.

புவனா வண்டி ஏறியதுமே குழந்தையின் ஆர்வத்துடன் சன்மானங்களைக் கிளறலானாள். ஜரிகை போட்ட பட்டுப் புடவை, பட்டுப் பாவாடை, பழங்களுடன் ஆயிரம் ரூபாய் சன்மானமும் அவளைப் பிரமிக்க வைத்தது!

(தொடரும்)

# குமரி அனந்தன் பேசியது சரியா?



ஜீ. எம். ஃப்பிரையுடன் வ.உ.சி. சுப்பிரமணியன்

'உ' என்றால் உலகநாதம் பிள்ளை; 'சி' என்றால் சிதம்பரனார்; 'வ' என்றால் வந்தே மாதரம் என்று குமரி அனந்தன் கூறியதாக 4.1.87 கல்கி இதழில் ஒரு செய்தி.

இதை மறுத்துச் சில கடிதங்கள்:

அலங்கயம், ஏ. வேங்கடேசன்: 'வ' என்பது அவர் பிறந்த ஊரான வட்டப்பிடாரத்தைக் குறிக்கும்;

சென்னை, மா.ரா. அரசு: 'வ' என்பது வள்ளிநாயகம் என்பதைக் குறிக்கும்;

கோவில்பட்டி டி. கோபாலகிருஷ்ணன்: 'வ' என்பது சொந்த ஊரான வண்டானத்தைக் குறிக்கும்.

இவற்றில் எது சரி? வ.உ.சி.யின் மகன், வ.உ.சி. சுப்பிரமணியத்தினைக் கேட்டோம். அவர் கூறியது:

'வந்தே மாதரம் பிள்ளை' என்று மக்கள் அன்று பெருமையாக அழைத்து உண்டு. ஆனால் வ.உ.சி. என்பதற்கு உண்மையான விளக்கம் இதுதான்:

வள்ளிநாயகம் பிள்ளை மகன் உலகநாத பிள்ளை மகன் சிதம்பரம் பிள்ளை. மூன்று தலைமுறைகளைக் குறிக்கும் முதல் எழுத்துக்கள் அவை.

அமெரிக்கத் தகவல் நிலையத்தில் நான் பணிபுரிந்த காலத்தில், எனக்குப் பிறந்த நாள் வாழ்த்துத் தெரிவிக்க வந்த அதிகாரி ஜி.எம். ஃப்பிரை, 'வள்ளிநாயகம் உலகநாதன் சிதம்பரம் சுப்பிரமணியன்' என்று எனது முழுப் பெயரையும் சொல்லிச் சிரித்தபடி வாழ்த்தியது எனக்கு நினைவுக்கு வருகிறது.

— நிருபர்

•• நமது வாழ்க்கை வெறும் பிழைப்பாகப் போய்விட்டால், மனிதன் வெறும் மிருகமாகப் போய் விடுவான்!

"நான் டைரக்டர் ஸார்கிட்டே ஏழாவது அசிஸ்டென்ட் ஆக இருக்கிறேன்."

"உங்க டைரக்டர் யார்?"

"சிவ. விஷ்ணு."

"அவரு, என்னங்க அப்படி ஒரு பேரை வைச்சிக்கிட்டு இருக்காரு?"

"இந்து முஸ்லீம் ஒற்றுமைக்காக அப்படி வைச்சிக்கிட்டு இருக்காரு!"

"என்னங்க, நீங்க கொடுக்கிற கமினெக்ஷனே சரியா இல்லீங்களே? இந்து முஸ்லீம் ஒற்றுமைங்கிறீங்க. பேரு என்னவோ சிவ. விஷ்ணு...."

"அதில்லீங்க. முதல்லே ஹிந்து மதத்துக்குள்ளே சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் ஒற்றுமை. அப்புறம் பிற மதங்களோட ஒற்றுமை."

"உங்க டைரக்டர் சர்வ மதசமரஸத்துலே ஆரம்ப கட்டத்திலே இருக்கிறார்னு சொல்லுங்க. சரி, டைரக்டர் சிவ விஷ்ணு, அப்புறம் ஆறு அசிஸ்டென்ட்கள் யாரு யாரு?"

"முதல் அசிஸ்டென்ட் விஷ்ணு குமார். இரண்டாவது குமார் சம்பத். மூணாவது சம்பத் நாமதேவன். நாலாவது நாமதேவன் பன்னீர். அஞ்சாவது பன்னீர் பரஞ்சோதி. ஆறுவது சோதி சொக்கலிங்கம். ஏழாவது நான்தான் லிங்கம் பரப்பிரும்மம்."

"உங்க டைரக்டர் ஸார் படத்தில் வர்ற காட்சிகளிலே கன்டினியூடி இருக்குதோ இல்லேயோ உங்க பெயர்களிலே இருக்கு. பழைய காலத்திலே அந்தாதிப் புலவர்களா இருந்திருப்பீங்க போல. ஆமாம், தெரியாமத்தான் கேட்கிறேன். சிவனிடத்தில் ஆரம்பித்துப் பிரும்மாவில் முடிக்கிறீங்களே, படைக்கும்கடவுளானபிரும்மாவைமுதல்லே வைச்சு அழிக்கும் கடவுள் சிவனைக் கடைசியில் போட்டிருந்தால்லே சரியாய் இருந்திருக்கும்?"

# ஏழாவது அசிஸ்டெண்ட்!



''நாங்க ஏழு பேருமே பழைய கதைகளை உல்டா பண்ணுவதில் வல்லவர்கள். புராணத்தையும் உல்டா பண்ணி நவீனமாக் கிட்டோம்.''

''சரி, நாங்க உங்களை முதல் முழு டைரக்டராகப் போட்டுப் படம் எடுக்கிறோம். கதையின் 'த்ரெட்' என்ன?''

''ஒரே ஒரு இழை மட்டும் சொல்றேன். கவனமா கேளுங்க. ஒரு பையனும் ஒரு பெண்ணும் ஒருத்தரை ஒருத்தர் காதலிக்கிறாங்க. கடைசியில் ஒன்றாய்ச் சேர முடியாமல் சாவறாங்க.''

''என்னங்க, ரோமியோ ஜூலியட் கதையை நேரே சொல்லிட்டீங்க. உல்டாவில் நிபுணர் என்று சொல்லிக்கிட்டீங்க?''

''உல்டாவும் இருக்கு. பி அண்ட் சி ஊர்களிலே பையனும் பெண்ணும் கடைசி சீன்லே கல்யாணம் கட்டிக்கிறாங்க. ஏ சென்டரில் மட்டும் கடலோரமா விழுந்து சாவறாங்க!''



''நாம் எடுக்கப் போறது ஒரு படம் தாங்க. நீங்க இரண்டு படம் போலப் பேச நீங்க. பேருதான் லிங்கம் பரப் பிரும்மம் என்று இரண்டா வைச்சிக்கிட்டீங்கன்னு பார்த்தால் படமும் இரண்டா பண்ணிக்கொடுத்திடுவீங்க போலத் தெரியுதே!''

''பேரை இரண்டா வச்சிக்கிட்டதுக்கு சென்டிமென்ட் இருக்கு. ஹாலிவுட்டில் பாருங்க பில்லி வைல்டர், ஆல்ஃபிரட் ஹிட்ச்காக், சார்லி சாப்ளின், எல்லாமே இரண்டிரண்டு பெயர்கள். படம் இரண்டு வந்திடுமோன்னு பயப்படாதீங்க. கடைசி சீன் மட்டும்தான் இரண்டு.''

''நான் கதையின் த்ரெட் அப்படின்னதும் ஓர் இழையிலே கதையை முடிச்சிட்டீங்க. நூலிழையில் கதை இருந்தால் படம் அறுந்திடாதா?''

''அப்படியெல்லாம் ஆவாது. கதைதான் நூலிழை. ஆனால் அதுல நடவப் போறோம் பாருங்க மசாலா மாஞ்சாவுகும்மா மல்தான்.''

''அண்ணே, எல்லா ரீலும் மல்லே விட்டா படம் அம்பேல் ஆயிட்டா?''

''என்னங்க, ஒரு படம் தயாரிக்கல்லே. அதுக்குள்ளே டி. ராஜேந்தருக்குப் போட்டியா பேச ஆரம்பிச்சிட்டீங்க!''

''ஏன் அண்ணே, நீங்க முதல் படம் தனியாய் டைரக்ட் செய்யச் சொன்னதும் ஷேக்ஸ்பியர் மடியிலே கை வைக்கறீங்க. நாங்க மட்டும் டி. ராஜேந்தர் பாணியிலே பேசக் கூடாதா?''

''அட, ஷேக்ஸ்பீயர் என்னய்யா பெரிய ஷேக்ஸ்பீயர்? அவர் கதை ஏழாயிரம் அடியோடு ஓவர். மிச்ச ஆறாயிரம் அடியில்லை படம் ஓடப் போவுது?''

''அது என்ன மிச்சம் ஆறாயிரம் அடி படம் கணக்கு?''

''எண்ணிக்குங்க. ஒவ்வொண்ணா சொல்றேன். டிஸ்கோ டான்ஸ் ஆயிரம் அடி. பழைய பாஷையிலே காபரே டான்ஸ். அப்புறம் கராத்தே சண்டை ஆயிரம் அடி. கிராமத் தேர்த் திருவிழா க்ரூப் டான்ஸ் ஆயிரம் அடி. கனவுக் காட்சி காதல் டூயட். கதாநாயகனும் கதாநாயகியும் ராஜா ராணி வேஷத்திலே ஆயிரம் அடி. தத்துவப் பாடல் ஆயிரம் அடி. காமெடி ட்ராக் ஆயிரம் அடி.''

''இத்தனையும் நாங்க முன்னாடியே எடுத்திட்டோம். நீங்க மெயின் கதையை மட்டும் எடுத்துக் கொடுங்க!''

''அதெப்படி எடுத்தீங்க?''

''ஒரிஜினலா நாங்க படம் பண்ணித் தரணும்னு உங்க டைரக்டர் ஸார் சிவ விஷ்ணு கிட்டத்தான் போனோம். அவரு இதுவரைக்கும் டைரக்ட் செய்த ஏழு படங்களும் எக்கச்சக்கமாக ஓடி ஒவ்வொரு வெற்றிப் படத்துக்கும் அவருக்கு ஏழு ஏழு படங்கள் புதுசாபுக் ஆகி அவர் நாற்பத்து ஒன்பது படங்களுக்கு ஷெட்யூல் கொடுத்திருக்காரு. அதனாலே நீங்க என் முதல் அசிஸ்டென்ட் விஷ்ணு குமாரை டைரக்டரா வைச்சுப் படம் பண்ணுங்க அப்படின்னார் அவர். விஷ்ணு குமார் டிஸ்கோ டான்ஸ் ஆயிரம் அடி எடுத்துக் கொடுத்திட்டு இப்ப நான் ரொம்ப பிஸி. நீங்க இரண்டாவது அசிஸ்டென்ட் குமார் சம்பத்தை டைரக்டரா வைச்சுப் படம் பண்ணிக்கிங்கன்னார். குமார் சம்பத் டக்குனு ஒரு கராத்தே சண்டையை ஆயிரம் அடிக்குப் படமாக்கிக் கொடுத்திட்டு நீங்க சம்பத் நாமதேவனை மேற்கொண்டு பாருங்கன்னார். சம்பத் நாமதேவன் கிராமத் தேர்த் திருவிழா க்ரூப் டான்ஸ் ஆயிரம் அடி படம் பிடிச்சிட்டு நீங்க நாமதேவன் பன்னீரைப் பாருங்கன்னார். நாமதேவன் பன்னீர் — கனவுக் காட்சி காதல் டூயட் கதாநாயகனும் கதாநாயகியும் ராஜா

ஐராவதம்

# SUGUNA

THE RENOWNED NAME
FOR OVER 25 YEARS



DOMESTIC
COUPLED PUMPSET

நீண்ட நாட்கள் தொல்லையின்றி உழைக்க உட்பாகங்கள் அனைத்தும் தொழில் நுணுக்கங்களோடு பொருத்தப்பட்டு பரிசோதனைக்கு பின்பே விற்பனைக்கு கிடைக்கின்றது விற்பனைக்குப் பிறகு சிறந்த சர்வீஸ் வசதி அளிக்கப்படும்.



DEEP WELL JET PUMPS

**சுகுண இண்டஸ்ட்ரீஸ்**
160, லிங்கி செட்டி தெரு, சென்னை-600 001
போன் : 22273

Regional Office : 3/65, அவனுசி ரோடு, P.N.பாளையம், கோயமுத்தூர்- 641018




பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணுக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 200/– ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2000/– மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 200/– அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்;

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D–76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்–612 001.

**இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.**

ராணி வேஷத்திலே ஆயிரம் அடி பண்ணிட்டு நீங்க பன்னீர் பரஞ்சோதியைப் பாருங்கன்னார். பன்னீர் பரஞ்சோதி சுறுசுறுப்பாகப் பரங்கிமலையிலும் சாந்தோம் கடற்கரையிலும் ஒரு தத்துவப் பாடல் அதே ஆயிரம் அடிக்குப் படமாக்கினார். அப்பாலே சோதி சொக்கலிங்கத்தைப் பார்க்கச் சொல்லிட்டார். சோதி சொக்கலிங்கம் ஆயிரம் அடிக்குக் காமெடி ட்ராக் படம் பிடிச்சுட்டு உங்களைப் பார்க்கச் சொல்லிவிட்டாரு. ஆக மொத்தம் படம் ஆறாயிரம் அடி கையில் இருக்கு. நீங்க மெயின் கதைக்கு வாங்க.''

''இப்பப் புரிஞ்சிட்டதா சிவ விஷ்ணுவின் தத்துவம்? சிவ விஷ்ணு கடைசியில் லிங்கம் பரப்பிரும்மம்கிட்ட அடக்கம். மற்ற ஆறு அசிஸ்டெண்டுகளும் அந்தந்த டிபார்ட்மெண்ட் ஆயிரம் அடிக்குப் பொறுப்பானவங்க. தத்துவப் பாடல் ஆசாமிகிட்டப் போய் நீங்க காமெடி ட்ராக்கைத் தேடினா குழப்பம்தான் மிஞ்சும். ஆனால் அந்த ஆறு பேரும் உங்களை ஏமாத்தலே. தன் தன் இலாகா வேலையை முடிச்சுக் கொடுத்திட்டு வேறு இடத்துக்கு உங்களை அனுப்பிச்சிட்டாங்க. சிவ விஷ்ணுவின் ஏழு படங்களின் வெற்றி ரகசியம் இப்பப் புரியுதா? எல்லாப் படத்துக்கும் ஒரே 'த்ரெட்'தான். ஒரே இழைதான். பையன் — பெண் — காதல் — குறுக்கீடு — சாவு அல்லது கல்யாணம். அத்தனைக்கும் ஆதாரம் லிங்கம் பரப்பிரும்மம். நீங்க எப்படி எப்படியோ தட்டுக்கெட்டுக் கடைசியிலே மெயின் ஆளைப் பிடிச்சிட்டீங்க. நாங்க கதைகளை உல்டா பண்றவங்க. நீங்க டைரக்டர் ஸாரையும் ஆறு அசிஸ்டென்ட்களையும் உல்டா பண்ணிட்டு ஏழாவது அசிஸ்டென்டை மெயின் டைரக்டராய்ப் போட நீங்க. நான் ஒரு சின்ன உல்டா என் பெயரிலே பண்ணிக்கப் போறேன். அதுக்கு நீங்க சம்மதிக்கணும்.''

''என்னது அது?''

''இனி என் பெயர் பரப்பிரும்மம் லிங்கம்.''

''பெயரிலேயே உல்ட்டாவா? படம் உருப்பட்டாற் போலத்தான்!''

''அப்படிச் சொல்லாதீங்க. படத்தின் பெயர் என்ன தெரியுமா?''

''என்ன?''

''வரப்பெல்லாம் தங்கம்!''

''எங்கள் கையிருப்பெல்லாம் பெருங்காயம் ஆகாமலிருந்தால் சரி!''

---

# பரிசு ரூ.200/-

## பொன்மொழிப் போட்டி — 4

**தவறாமல் பங்கு பெறுங்கள். போட்டியில் நீங்கள் வெற்றி பெறாவிட்டாலும் வாழ்க்கையில் வெற்றி பெற நிச்சயம் உதவும்.**

இந்த இதழின் உள்பக்க மார்ஜினில் நான்கு பொன்மொழிகள் உள்ளன. கீழே நான்கு பெயர்கள் தரப்பட்டுள்ளன. பொருத்தம் பார்த்து ஒவ்வொரு பெயர் அருகிலும் உள்ள வெற்றிடத்தில் ஒவ்வொரு பொன்மொழியை நீங்களே உங்கள் கைப்படத் தவறின்றி எழுதுவதுடன் விலாசத்தையும் பூர்த்தி செய்து அனுப்பவும். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால், பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். உறையின்மேல் ''பொன்மொழிப் போட்டி — 4'' என்று குறிப்பிடவும்.



டி. எஸ். எலியட்:

சத்யசாயிபாபா:

பைபிள்:

ராஜாஜி:

**முடிவு தேதி: 11.2.87**

பெயர்: ..............................................................

விலாசம்: ..............................................................

..............................................................



"ULIP ஒன்றே, ஒரு குடும்பத்துக்கு முழுமையான— நம்பகமான பாதுகாப்பு"

திருமதி புஷ்பா பிள்ளை,
குடும்பத்தலைவி.

மேலும் விவரங்களுக்கு இந்தக் கூப்பனை அதில் காணப்படும் முகவரிக்கு பூர்த்தி செய்து அனுப்புங்கள்.

Unit Trust of India, Post Bag 5063, Madras – 600 001.
Please send me the free ULIP brochure

Name: ____________________

Address: ____________________

____________________

____________________

34

இலக்குத் தொகையாக ரூ. 3000/- முதல் ரூ. 40,000/- வரை தேர்ந்தெடுக்கும் வசதி, விபத்து மற்றும் ஆயுள் காப்பீடு, 7.5% வரையிலான போனஸ் (திட்டம் பூர்த்தியாகும்போது கொடுக்கப்படுவது) மற்றும் வருவாய்வரி சட்டம் 80C பிரிவின் கீழ் முழுவரிவிலக்கு முதலிய சிறந்த அம்சங்களைக் கொண்டது யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டம்.

**10 ஆண்டு திட்டத்தில் சேருவதற்கு அதிகபட்ச வயது 50 ஆண்டுகளாக தற்போது உயர்த்தப்பட்டுள்ளது.**

ஆண்டிற்கு ரூ. 4000/- வீதம் ரூ. 40,000/- குறியீட்டுத் திட்டத்தில் சேர்ந்து செலுத்துவதின் மூலம் 10 ஆண்டுகள் முடிவில் கிட்டத்தட்ட ரூ. 69,000/- முதல் ரூ. 72,000/- வரை பெறலாம்.

உங்கள் குடும்ப நலனில் ULIP அக்கரை செலுத்துவதுபோல் இத்திட்டத்தை வழங்கிடும் யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா உங்கள் முதலீட்டிற்கு முழுமையான பாதுகாப்பு அளிக்கிறது.

உன்னதமானதையே தேர்ந்தெடுங்கள். அருகிலுள்ள கனரா வங்கியின் கிளைகளிலோ அல்லது யூனிட்ட்ரஸ்டின் ஏஜெண்டுகள் மற்றும் தலைமை பிரதிநிதிகளையோ அணுகுங்கள்.

## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

தலைமை அலுவலகம்: பம்பாய் 20.
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)

மண்டல அலுவலகம்: "ரெஜினா மான்சன்"
46, செகண்ட் லைன் பீச், சென்னை-600 001
போன்: 27433/24146

முக்கியப் பிரதிநிதிகள்: ● திரு. ஏ. தனபால், கோயம்புத்தூர். போன்: 34776
திரு. எம். ராமமூர்த்தி, மதுரை. போன்: 30160, 43179 ● திரு. கே. முத்துசாமி, தஞ்சாவூர். போன்: 20374 ● திரு. என்.கே. இங்கர்சால், சேலம். போன்: 51520
திரு. எம். ராமலிங்கம், திருச்சி. போன்: 28280
திரு. பி. நாராயணன், வேலூர். போன்: 21575 ● திரு. எஸ். பாலகிருஷ்ணன், கடலூர். போன்: 546, 46 ● திரு. எஸ். சுபாஸ் சந்திரபோஸ், நாகர்கோவில். போன்: 4449

# ULIP- முதன்மையான, முழுமையானதொரு திட்டம்.

Sista's - UTI.640.86 TM A R



புதுக்கவிதைப் போட்டி — 6

# ஊழலுக்கு ஒட்டு போட்டால்...

14.12.86 இதழில் வெளியான அரசியல் கார்ட்டூன்களின் அடிப்படையில் எழுதப்பட்டவை:

## முதல் பரிசுக் கவிதை

ஊழலுக்கு ஓட்டு போட்டு
உரிமைகளைப் பிச்சையிட்டு
'ஊழலே ஒழிக' என்றால்,
ஒழிவது நாமன்றோ!
மக்களுக்கு அறிவு வந்து
மயக்கமின்றி வாக்களித்தால்,
ஊழலையும் ஒழிக்கலாம் — அதன்
'பாட்டலை'யும் அழிக்கலாம்!

— வி. செல்வக்குமார்,
பதினோராம் வகுப்பு 'A' பிரிவு,
மறைமலை அடிகள் மேல்நிலைப் பள்ளி, (அரசு),
பல்லாவரம், சென்னை — 43.

## இரண்டாம் பரிசுக் கவிதை

பசி வந்திடப்
பத்தும் பறந்து போம்!
பதவிப் பசியும்
அதிலே அடங்கும்!
சந்தேகமானால்....
ஆரத் பவாரைக்
கேளுங்கள்!

— ஏ. உமாபதி எம்.எஸ்ஸி (கணிதம்) இரண்டாம் ஆண்டு,
அரசினர் ஆண்கள் கலைக்கல்லூரி,
சேலம் — 636 007.

ஊழல் ஊழல் ஊழல் — இலஞ்ச
ஊழல் போனால் ஊழல் போனால் — அரசு
வீழல் வீழல் வீழல்!
இலஞ்சம் இலஞ்சம் இலஞ்சம்
இலஞ்சம் போனால் இலஞ்சம் போனால் — பதவி
நச்சாம் நஞ்சாம் நஞ்சாம்!
(ஓர் அமைச்சரின் புலம்பல்)

— செல்வி ஏ. பாரதி,
அரசு மேல்நிலைப் பள்ளி,
நாமக்கல் — 637 002.

சில்லறைக் கடைக்காரரிடம்
லாபகரமாக நடந்த
'லஞ்ச ஒழிப்பு'
வியாபாரத்தை
மொத்த வியாபாரமாக்கிப்
பெரிய கடைக்காரர்
குத்தகைக்கு எடுக்கிறார்
வர்த்தகம் மேலும்
செழிக்க.

— ப. அப்துல் ராசிக்,
பி. எஸ்ஸி. வேதியியல், இரண்டாமாண்டு,
தெ. தி. இந்துக் கல்லூரி,
நாகர் கோயில், குமரி மாவட்டம்.



# 14

இந்திராவுக்குத் திக்கென்றது.

நந்தகுமார் எப்போதும் அவளைப் பின்னிக் கொண்டு படுப்பதுதான் வழக்கம். இப்போது அவனைத் தனியாகப் படு என்று எப்படிச் சொல்வது?

சரசரவென்று லேசான சப்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தாள்.

"சும்மா உலாத்திட்டு வரேன்'' என்று முணுமுணுத்துக் கொண்டே பாண்டியன் அவர்களைக் கடந்து வாசலில் இறங்கினான்.

இந்திராவிற்கும் நந்தகுமாருக்கும் இடையில் இருந்து, மேலும் குழப்பாமல் இருக்க விலகிக் கொள்கிறான் என்று அவளுக்குப் புரிந்தது.

புயல் காற்றில் செடிபோல் உணர்ந்தாள் இந்திரா.

"நந்து.''

"ம்.''

"நீ பெரியவனாயிட்டே இல்லே? இன்னும் அம்மா கூடவே ஒட்டிக்கிட்டிருந்தா எப்படி?''

"நீ எங்கே படுக்கப் போறே?''

"நான் எங்கே படுத்தா என்னடா? நீ இந்த ரூம்ல தூங்கு. நல்ல நல்ல கனவெல்லாம் வரும். நெறையப் படிக்கிற மாதிரி. ப்ரைஸ் வாங்கற மாதிரி.... கலெக்டரா வந்து கோட் சூட்டெல்லாம் போட்டுக்கிட்டு எனக்கு உன் கையால் சாப்பாடு ஊட்டற மாதிரி....''

"நீ எங்கே படுக்கப் போறே?''

## சின்னச்



# சின்ன கனவுகள்

இந்திராவுக்குத் திடீர் என்று நந்தகுமார் மீது கோபம் வந்தது. அடக்கிக் கொண்டாள்.

"சொன்னாக் கேளு நந்து!"

"நான் ஒன்னு சொன்னாக் கேக்கறியாம்மா?"

"என்னடா?" இந்திரா பொறுமையின்றிக் கேட்டாள். கடைக்கண்ணால் வாசலைப் பார்த்தாள். பாண்டியன் திரும்பி வந்து திண்ணையில் அமர்ந்திருந்தான். கைகளைக் கட்டிக் கொண்டு இந்திராவையும் நந்தகுமாரையும் பார்த்துக் கொண்டிருந்தான்.

"நம்ப ரெண்டு பேரும் செத்துப் போயிடலாம்மா. நேரா நம்ப அப்பாகிட்டே போயிடலாம்மா...."

ஐயோ, என்ன பேச்சு பேசுகிறான்? இந்த இரண்டுங்கெட்டானிடம் என்ன சொல்லிப் புரிய வைப்பது?

இந்திராவுக்குத் திடீரென்று நடுங்கியது. ஆத்திரம், துக்கம் எல்லாம் கலந்து கோபமாய் மாறச் சட்டென்று கையை வீசினாள்.

அவனுடைய நந்துவின் கன்னத்தில் அவளது உள்ளங்கை மின்னலைப் போல் தீண்டியது.

நந்தகுமார் அம்மாவின் முகத்தை நிமிர்ந்து பார்த்துத் திடுக்கிட்டான். இது அம்மா இல்லை. வேறு யாரோ. நெற்றியில் பொட்டு வைத்த அம்மா ஒரு நாளில் மாறிப் போய் விட்டாள்.

கன்னத்தை வருடினான். கண்களில் கலபமாகப் பெருகிய நீரைச் சுண்டிவிட்டான்.

இந்திரா இன்னொரு முறை கை ஓங்குவதைப் பார்த்தாள். அங்கிருந்து அசையாமல் இறுக்கமாக அமர்ந்திருந்தான். இந்திராவின் ஓங்கிய கையை இன்னொரு கை பிடித்தது. இந்திரா நிமிர்ந்தாள். பாண்டியன் நின்றிருந்தான், அவள் கையை மிக இறுக்கமாகப் பற்றிக் கொண்டு.

"கல்யாணத்துக்கு முன்னால் நான் பார்த்த இந்திரா வேறே."

"அவன் என்ன சொல்றான்னு உங்களுக்குத் தெரிஞ்சா இப்படிச் சொல்ல மாட்டீங்க..."

நந்தகுமார் பாண்டியனைச் சுட்டெரிப்பது போலப் பார்த்தான். 'உன்னால்தானே எல்லாம்' என்ற குற்றச்சாட்டு அந்தக் கண்களில் இருந்தது.

நான் பார்த்துக்கிட்டுத்தான் இருந்தேன். கொஞ்ச நாள்ல சரியாய்டும். நான் அந்த ரூம்ல படுத்துக்கறேன். நீங்க ரெண்டு பேரும் இந்த ரூம்ல படுத்துக்குங்க. நேரமாவுது. தூக்கம் முழிச்சா கண்ணு எரிச்சல் எடுக்கும். நந்து....

நந்தகுமார் திரும்பி அமர்ந்திருந்தான்.

"நந்து" என்று அவன் தோளைத் தொட்டுத் திருப்பினான் பாண்டியன். "நீ எப்பவும் போல் அம்மா கூடவே படுத்துக்க. குட்நைட் சொல்லுவியா, அதுகூட மாட்டியா?"

பக்கத்தில் சலனம் கேட்டு இந்திரா புரண்டு பார்த்தாள். நந்தகுமார் எழுந்து அமர்ந்திருந்தான். இந்திரா புரண்டதைப் பார்த்துச் சட்டென்று எழுந்து கொண்டான்.

"தூங்கலேடா? எழுந்துட்டியே.... எங்கே போறே?"

"வேலைக்கு."

"இன்னும் விடியக் கூட இல்லே."

"இப்பவே கௌம்பினாத்தான் ஐயனார் கோயில்கிட்ட ஃபாக்டரி பஸ் வந்து சேர்ற நேரத்துக்குப் போக முடியும்."

அதற்குமேல் இந்திராவுடன் பேச விருப்பமில்லாதவன் போல அங்கிருந்து அகன்று புறக்கடைப் பக்கம் போனான்.

இந்திரா எழுந்து அவன் பின்னால் போனாள்.

நந்தகுமார் பல் துலக்கிக் கொண்டிருந்தான்.

"கொஞ்சம் உப்புமா கிளறிக் குடுக்கறேன். சாப்பிட்டுவிட்டு வேலைக்குப் போவியாம்."

நந்தகுமார் வாய் கொப்பளித்த நீரை உமிழ்ந்துவிட்டுச் சட்டை நுனியால் துடைத்துக் கொண்டான்.

"எனக்குப் ப்சிக்கலே. எதுவும் வேண்டாம்" என்றான் முறைப்பாக.

இந்திராவின் பதிலுக்குக் காத்திராமல் விடுவிடென்று நடந்து வாசல் கதவைத் திறந்து பனிப் புகையில் கலந்தான்.

இந்திரா அவன் நடந்து போவதையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரு பெருமூச்சுடன் உள்ளே வந்து பார்த்தாள். பாண்டியன் படுக்கை காலியாக இருந்தது. அவனும் எழுந்து பின்பக்கம் போய் விட்டான் போலும்.

அவனுக்காவது உப்புமா செய்துவிட வேண்டும் என்று நினைத்துக் கொண்டு இந்திரா சமையல் அறையில் நுழைந்தாள். அறை வாசலில் கனைப்பு கேட்டது.

"பட்டாசு ஃபாக்டரிக்குப் போகணும் இந்திரா. முதலாளி வேறே ஊர்ல இல்லே. அதனால சீக்கிரமே ஃபாக்டரிக்குப் போய் வேலையைக் கவனிக்கணும். மத்தியானம் சாப்பாட்டுக்கு வரேன். இப்ப எதுவும் வேணாம்" என்றான் பாண்டியன். புறப்பட்டான்.

இந்திராவுக்கு அவனிடம் மன்னிப்புக் கோர வேண்டும் போல் இருந்தது. பாண்டி

அபா

யன் இருந்த அவசரச் சூழ்நிலையில் அவளது பேச்சை ரசிப்பான் என்று தோன்றவில்லை.

கையசைத்துப் பாண்டியனை அனுப்பி வைத்தாள்.

பஸ்ஸுக்குள் நிறைய சின்ன முகங்கள். இரட்டைப் பின்னல்கள். ஒற்றைப் பின்னல்கள். பரட்டைத் தலைகள். வெள்ளைச் சட்டை. நீலச் சட்டை. பூப் போட்ட சட்டை. பூனைக் கண்கள். யானைக் கண்கள். சில கண்களில் இன்னும் தூக்கம் மிச்சம் இருந்தது. கீச்சுக் குரல்களில் ஓடைச் சிரிப்புகளில் அவர்கள் சுக துக்கங்களைப் பரிமாறிக் கொண்டார்கள். நந்தகுமார் அவர்களுடன் கலக்காமல் ஜன்னல் சதுரம் வழியாகச் சாலை ஓரத்தில் பார்வையைப் பதித்தான். நிறைய ஓட்டு வீடுகள். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் கோலம் போட்டுக் கொண்டு, சாணி நீர் தெளித்துக் கொண்டு பெண்கள். பஸ்ஸைப் பார்த்துவிட்டு அவசர அவசரமாக வீட்டுப் படியை விட்டு விலகி ஓடி வந்த சிறுவர்கள். பஸ் அவர்களுக்காக என்று அங்கங்கே நின்றது.

''கலெக்டரு...'' என்ற குரல் அவனைத் திடுக்கிட வைத்தது.. குரல் வந்த திக்கைப் பார்த்தான். தங்கராஜ்.

''வேலைக்கா கலெக்டரு? போங்க. போங்க. பின்னாலேயே வரேன்.''

நந்தகுமார் ஒரு சிரிப்பை உதிர்த்தான். கண்களை எட்டாத உலர்ந்த சிரிப்பு. பஸ் உறுமிக் கொண்டு புறப்பட்டது.

அந்தத் தெரு முனை போகும் வரை பஸ்ஸின் சளசளப்பு மழைபோல் தொடர்ந்தது. பஸ் முனையைத் தொட்டுத் திரும்பியவுடன் தான் டிரைவர் சாலையின் குறுக்கே இரண்டு கைகளையும் இறக்கை போல் ஆட்டிக் கொண்டு நின்ற அவனைக் கவனித்தான். 'அட நம்ப ரத்தினத்தோட தம்பியில்ல?' என்று வியந்து கொண்டு பஸ்ஸின் ப்ரேக்கைச் சட்டென்று அழுத்தினான்.

''என்னமுத்தண்ணே?'' என்றான் ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்து.

''பஸ்ஸை பாக்டரிக்கு விட வேண்டாம். பசங்களை எல்லாம் எறக்கிடுங்க'' என்றான் முத்து. அவசர அவசரமாக பஸ்ஸைச் சுற்றி வந்து பஸ்ஸில் ஏறினான்.

''ஏய் பசங்களா.... இன்னிக்கு உங்க எல்லோருக்கும் லீவு. எல்லோரும் எறங்கி வீட்டுக்குப் போங்க'' என்றான்.

''என்னண்ணே விஷயம்?'' என்றான் டிரைவர், ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு.

''எனக்கும் சரியாத் தெரியலே. பாக்டரி வாசல்ல போலீஸ் வேன் நிக்குது. அண்ணன் தான் வந்து, 'பஸ்ஸுங்களையெல்லாம் நிப்பாட்டித் திருப்பிவிட்டுடு'ன்னு சொன்னாரு....''

கவிழ்க்கப்பட்ட பூக்கூடையிலிருந்து சிதறிய மலர்கள்போல் பஸ்ஸிலிருந்து அவர்கள் உதிர்ந்தார்கள். சந்தோஷ இரைச்சல்களுடன் ஃபாக்டரிக்கு எதிர்த் திசையில் ஓடத் தொடங்கினார்கள்.

நந்தகுமார் இறங்கினான். சுற்றிக் கொண்டிருந்த ராட்டினத்திலிருந்து திடீர் என்று இறங்கினாற் போல் இருந்தது. என்ன செய்யலாம்? மறுபடி வீட்டுக்குப் போகப் பிடிக்கவில்லை.

'கலெக்டரு' என்று அழைத்துக் கையை ஆட்டிய தங்கராஜின் முகம் நினைவில் புரண்டது.

முகத்தில் லேசான புன்னகை வந்து தொற்றிக் கொள்ள நந்தகுமார் தங்கராஜ் வீட்டை நோக்கி நடந்தான்.

''என்ன கலெக்டரு?'' என்றான் தங்கராஜ் வியப்புடன் இவனைப் பார்த்ததும்.

''பாக்டரிக்கு லீவு விட்டுட்டாங்க அண்ணே!'' என்றான் நந்தகுமார். கண்களைச் சுழற்றி வீட்டைப் பார்த்தான். வீட்டில் அங்கங்கே பொருட்கள் இறைந்திருந்தன. துடைத்துக் கொண்ட டவல் கொடியிலிருந்து 'இதோ விழுந்துவிடுவேன்' என்றுசொல்லிக்கொண்டிருந்தது. மேற்கூரையில் பொருத்தப்பட்டிருந்த கண்ணாடிச் சதுரத்தின் வழியாகச் சூரிய ஒளி வெள்ளம். அந்த ஒளி வீழ்ச்சியில் தூசி பறந்தது. சுவர் மூலையில் ஒரு சிலந்தி வலை. சிலந்தி காலை உணவுக்காகக் காத்திருந்தது.

நந்துவின் மன ஓட்டத்தைப் புரிந்து கொண்ட தங்கராஜ், ''அண்ணி வந்துட்டா எல்லாம் சரியாய்டும் கலெக்டரு... கல்யாணமாகாத சோம்பேறி ஆம்பிளைங்க எல்லாம் என்னை மாதிரித்தான் இருப்பாங்க... பாத்து வெச்சிக்க'' என்றான். சட்டையின் கடைசிப் பித்தானை மாட்டிக்கொண்டே, ''போவட்டும், ஏன் பாக்டரி லீவாம்?'' என்றான்.

''தெரியலே. ஏதோ போலீஸ் வேன் வந்திருக்குதாம். பஸ் தெரு முனையைத் தாண்டித் திரும்பின உடனேயே நிறுத்திட்டாங்க.''

''போலீஸா?''

''ம்.''

''நம்ம பாக்டரியில போலீஸ் எதுக்கு வந்தது? போய்ப் பாத்துடுவோம். வரியா

இவர்: ''குடி குடியைக்கெடுக்கும் என்கிறது உண்மை தாங்க...''

அவர்: ''எப்படிச் சொல்றீங்க...?''

இவர்: ''குடும்பமே சேர்ந்து குடிக்க விடாமே தடுக்குது!''

— சத்தி. கமலேஸ்வரன்.






அவளுக்குத் தெரியும், வளரும் குழந்தைகளின்
தேவை என்னவென்று!

**ஆம்ப்ரோ®**
**மில்க் பேஸ்**

ஊட்டம் நிறைந்த
பிஸ்கெட்




Sista's-EIPL-389/86 Tam.A

# பாக்.கிரிக்கெட்டிலும் பாலிடிக்ஸ் உண்டு!



• இம்ரான்கான்

பாகிஸ்தான் குழு தேர்ந்தெடுப்பதிலும் முணுமுணுப்பு எழாமல் இல்லை. ஒருநாள் கிரிக்கெட் பந்தயத்துக்காகக் காப்டன் இம்ரான்கான் பர்த் சென்றிருந்தபோது, பாகிஸ்தானின் தேர்வாளர்கள் பாகிஸ்தான் குழுவினரைத் தேர்ந்தெடுத்து அறிவித்துவிட்டனர். வந்த கோபத்தில் இம்ரான்கான் காப்டன் பதவியையே துறக்கப் போவதாக அறிக்கை வெளியிட்டார்! மோஷின் கான், ரிஸ்வான் அஸ்ஜமான் ஆகிய இருவரையும் புறக்கணித்ததைக் கண்டு அங்கலாய்த்தார்! இம்ரானின் பிடிவாதத்தால் இப்பொழுது பாகிஸ்தான் குழுவில் ரிஸ்வான் அஸ்ஜமான் மட்டும் இடம் பெற்றிருக்கிறார்!

காப்டன் இம்ரான்கான் இரு அணிகளின் நாடுகளையும் சேராத நியூட்ரல் அம்பயர்கள் தேவை என்று வாதாடி வருபவர்! அவர் முயற்சி காரணமாகப் பாகிஸ்தான் முதன்முதலாக நியூட்ரல் அம்பயர்களை அமர்த்தி வெற்றி கண்டது.

— குண்டுமணி

---

கலெக்டரு?''

''ம்'' என்றான் நந்தகுமார் டிரைவரை மேலேற்றி விட்டுக் கொண்டு.

வீட்டைப் பூட்டிக் கொண்டு புறப்பட்டார்கள்.

●● ஃபாக்டரி இருக்கும் தெருவில் நுழைந்ததும் முடிச்சு முடிச்சாக மக்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

''என்னவாம்?'' என்றான் தங்கராஜ் வாயில் வெற்றிலை மென்ற ஒருவனை அணுகி.

''தெரியலீங்க. ஏதோ போலீஸ் கேஸு. எல்லாரும் நிக்கறாங்க. நானும் நிக்கறேன்.''

போலீஸ் வேன் தெரிந்தது. ஃபாக்டரி காம்பவுண்டில் நுழைந்ததும் ஆம்புலன்ஸ் சிவப்பு கூட்டல் குறியுடன் தெரிந்தது. ஒரு தீயணைப்புப் படை லாரி.

''என்னவோ ஆக்ஸிடெண்ட் கலெக்டரு'' என்றான் தங்கராஜ். சிறிது தூரத்தில் பெரிய அரைவட்டம் போட்டிருந்த மக்கள் கூட்டம் தென்பட்டது. தங்கராஜ் அதை நோக்கி முன்னேறினான்.

''இணைத்துக்கிட்ட நிக்கறாங்க... என்னன்னு தெரியலையே'' என்று தங்கராஜ் தனக்குத்தானே சொல்லிக் கொள்வது போல் சொன்னான். கூட்டத்தை நெருங்க நெருங்க ஆவல் நிறைந்த தலைகள் எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. எல்லோரும் ஃபாக்டரி ஊழியர்கள்.

''என்ன ஆச்சு ராமமூர்த்தி?'' என்று தங்கராஜ் கேட்டு முடிப்பதற்குள் பின்னால் கார் ஒன்று வந்து சக்கரம் தேய நிற்கும் சத்தம் கேட்டவுடன் திரும்பினான்.

காரிலிருந்து மாயகிருஷ்ணன் துக்க முகத்துடன் இறங்கினார். தங்கராஜ் கையைத் தூக்கி 'குட்மார்னிங்சார்' என்றான். முதலாளி கையை மட்டும் தூக்கினார். ரத்தினம் முன்னால் சென்று, 'முதலாளி, முதலாளி' என்று பராக் சொல்ல, கூட்டத்தில் அம்பு பிளந்ததைப் போல் சர்ரென்று ஒரு வழி பிளந்து தெரிய, மாயகிருஷ்ணன் முன்னேறினார்.

''வா கலெக்டரு'' என்று முதலாளியை ஒட்டிக் கொண்டு நடந்தான் தங்கராஜ்.

கூட்டத்தின் விளிம்பிற்கு வந்து நின்று எட்டிப் பார்த்தான்.

கிணற்றுக்கு நேர் மேலே சில காகங்கள் வட்டமிட்டுப் பறந்தன. 'காகா' என்று கரைந்தன. கிணற்றுச் சுவர் மீது நின்று கொண்டு ஹெல்மெட் அணிந்த தீயணைப்புப் படை ஆசாமி, 'மெதுவா ஏறு.... மெதுவா ஏறு' என்று சொல்லிக் கொண்டிருக்க, கிணற்றுக்குள்ளேயிருந்து ஒரு தலை வெளி உலகைத் தொட்டது. இன்னொரு தீயணைப்புப் படை ஆசாமி, வெளியே வந்து, கூடவே பல்லில் கடித்துக் கொண்டு வந்த வடக் கயிற்றை மேலே இழுக்கத் தொடங்கினான்.

உள்ளேயிருந்து மேலே வந்த விஷயம் பாரமானதாய் இருந்திருக்க வேண்டும். பல்லைக் கடித்துக் கொண்டு இரு ஆசாமிகளும் இணைந்து இழுத்தார்கள்.

அது ஓர் உடல்.

கூட்டம் திடீரென்று அதை உணர்ந்து, அதன் திடுக்கிடலைக் குரல்களில் காட்டியது.

பெண்ணின் உடல். முழங்கால் வரை புடைவை மேலேறி இருக்க, அதன் தலை கூட்டத்தின் பக்கம் பார்க்காமல் எதிர்ப் பக்கம் திரும்பியிருந்தது. தலைமுடி விரிந்து தொங்கியிருந்தது. அதன் இடுப்பில் கட்டப்பட்டிருந்த கயிறுடன் அந்த உடலைப் பிடித்து அந்த இரு காக்கி ஆசாமிகளும் கையில் ஏந்தித் தரையில் விட உடல் லேசாகப் புரண்டது. அதன் ஒரு காலில் இருந்த கொலுசு 'ஜல்' என்றது. முகம் கூட்டத்தைப் பார்த்துத் திரும்பி விழ, அந்த முகத்தைப் பார்த்து விட்டு —

''பரிமளா!'' என்று அலறினான் தங்கராஜ்.

(தொடரும்)

V.V.D

குறும்பின் பல சிறகடிக்க
இளமை ஊஞ்சலாடும் அழகி.
அவள் நெஞ்சைக் கவர்ந்தவைப் பல.
மெல்லத் தவழ்ந்து செல்லும் நீரோடை..
செல்லமாய் வீசும் தென்றல்.
உள்ளம் கவர்ந்த கட்டழகன்.
கொள்ளை அழகு மலர்கள்.
பளபளப்பான நீண்ட கூந்தல்
அக்கூந்தலுக்கு
வி.வி.டி. தேங்காய் எண்ணெய்...



VVD-10/86




**வி.வி.டி. தேங்காய் எண்ணெய்**
*இயற்கைக் கூந்தலின் இளமை ரகசியம்*

V.V.D

# ஆயுர்வேத முறையில் புற்றுநோய் சிகிச்சை



எனக்கு முப்பத்தைந்து வயது ஆகிறது. எனது மனைவி பரதம்மாவுக்கு நாலு பெண் குழந்தைகள். என் மனைவி வயிற்றில் கடின வலி தோன்றி நீராக வயிற்றுப் போக்கும் வாயிலெடுப்பும் ஏற்பட்டது. லேடி டாக்டர் என் மனைவியைப் பரிசோதித்து அவளுக்கு வயிற்றில் கட்டி, அவற்றை அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும் என்று கூறினார். இந்த வைத்தியப் பரிசோதனையில் நிவாரணம் கிடைக்காது. புற்றுநோய் நிபுணரை அணுகிய போது 'அப்டோமினல் சர்ஹோமா' என்று ஆய்வு மூலம் தெரியப்படுத்தினார். புற்றுநோய் சிகிச்சை நிபுணர் மின்சிகிச்சை மூலம் ஓரளவு வலியைக் குறைத்தார். அவள் வாழ்வு மலரும் என்ற நம்பிக்கை போய்விட்டது.

இந்த நிலையில் புற்றுநோய்க்கு அதிசய சக்தியுள்ள ஆயுர்வேதச் சிகிச்சையாளர் சிக்கட்பள்ளி டாக்டர் எம்.பாபுராவ் பற்றிக் கேள்விப்பட்டு, கடைசித் தடவையாக அவரை அணுகினோம். நான்கு வாரங்களுக்கு ஆயுர்வேத சிகிச்சை செய்யப்பட்டு என் மனைவிக்குப் பூரண குணமாகி, ஆறு வாரங்களுக்குப் பிறகு நிபுணர் வயிற்றில் கட்டியில்லை என்பதை உறுதிப்படுத்தினார். இன்றும் ஆறு வருஷங்களுக்குப் பிறகு சக்தி வாய்ந்த ஆயுர்வேத சிகிச்சை டாக்டர் பாபுராவால் கொடுக்கப்பட்டபின், என் மனைவி சகஜமான வாழ்வு நடத்துவதோடு மகிழ்ச்சிகரமாகவும் இருக்கிறாள். முந்தைய வலி அறிகுறிகள் எதுவும் ஏற்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

தகவல் தருபவர்: சந்த்ரையா, பட்வெல், ராஜேந்திரநகர், ரங்காரெட்டி மாவட்டம்.

| விலாசம் | போன் | பரிசோதனை நேரம் |
|---|---|---|
| டாக்டர் எம். பாபுராவ்<br>புற்றுநோய் சிகிச்சை நிலையம்,<br>(காரியாலயம்) 1—1—271/3, சிக்கட்பள்ளி,<br>ஹைதராபாத் — 500 020. | 64735 | ஒவ்வொரு வியாழன் வெள்ளியும். |
| C/o. ஹோட்டல் சுதாரா,<br>உஸ்மான் ரோட், தியாகராய நகர்,<br>சென்னை — 17. | 445164 | ஒவ்வொரு சனியும் |
| C/o. ஹோட்டல் பிருந்தாவன்,<br>எம். ஜி. ரோட்,<br>பெங்களூர் — 560 001. | 573271 | ஒவ்வொரு ஞாயிறும் |
| C/o. ஹோட்டல் நடராஜ்,<br>பஹாட் கஞ்ச், இம்பீரியல் தியேட்டர் அருகில்,<br>புதுதில்லி. | 522699 | ஒவ்வொரு செவ்வாயும் |
| C/o. ஹோட்டல் மிட் டவுன்<br>அந்தேரி ரயில்வே ஸ்டேஷன் எதிரில்<br>மேற்கு பம்பாய். | 628882 | ஒவ்வொரு புதன்கிழமையும் |

ராஜாஜி வாழ்க்கை வரலாறு III
ராஜ்மோகன் காந்தி

# காந்தியிடமிருந்து வந்த கடைசிக் கடிதம்



**தா**ற்காலிக கவர்னர் ஜெனரலாக, இரு வாரங்கள் சிறப்புப் பணியாற்றி விட்டுக் கல்கத்தா திரும்பிய மேற்குவங்க கவர்னர், அடுத்தடுத்து பல விருந்தினர்களை வரவேற்க வேண்டிய நிலையில் இருந்தார். பிரிட்டிஷ் அயல் விவகார மந்திரி (பர்மா தொடர்பான விஷயங்கள்) லிஸ்டோவெல் பிரபு, பர்மியப் பிரதமர் உ நூ, அவருடைய அயல் விவகார அமைச்சர் உ டின் டட் என்று பலர். டிசம்பர் மத்தியில் நேரு வந்தார். ராணுவத் தலைமைத் தளபதி கரியப்பா விஜயம் செய்தார். இந்தியப் பிரதமருக்கு கவர்னர் அளித்த வரவேற்பு வைபவத்தில் கல்கத்தா பிரமுகர்கள் ஏராளமான பேர் கலந்து கொண்டனர். ஆயினும், விருந்து சீக்கிரமே முடிந்துவிட்டது. அதன் பிறகு நீண்ட நேரம் — நடுநிசியையும் தாண்டி, பிரதமரும் ஸி. ஆரும் பேசிக் கொண்டிருந்தனர். இருவருமே ஒருவருக்கொருவர் புத்துணர்ச்சி ஊட்டிக் கொண்டிருப்பது போல் தோன்றியது. இதற்குச் சில தினங்களுக்குப் பிறகு, சரோஜினி நாயுடு வந்தார். ஜனவரி ஆரம்பத்தில் பட்டேல் வந்து மூன்று நாள் தங்கினார். பட்டேல் வருவதற்கு ஒரு நாள் முன்னதாக பிரிட்டிஷ் விமானப் படை அமைச்சர் வந்து போனார்.

இவர்களைத் தவிர சர்ச்சிலின் மகன் ரண்டால்ஃப் சர்ச்சில், ஆஸ்திரேலியாவுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த இந்திய கிரிக்கெட் அணி உறுப்பினர்கள், ஷாரவர்த்தி, மற்றும் பல ராஜதந்திரிகள் எல்லோரும் கவர்னரைப் பார்த்துப் பேசிவிட்டுப் போக வந்தனர். இவ்வாறு கவர்னரைக் காண வந்த பலருள் ஒருவருடன் ஸி. ஆர். ஒரு புதிய நட்புறவை வளர்த்துக் கொண்டார். அவர் டாக்டர் லோ சியா — லுயென். அவர் புது தில்லியில் இருந்த சீன நாட்டுத்தூதர். டாக்டர் லோ சம்பந்தப்பட்ட ஒரு நிகழ்ச்சி, கவர்னர் மாளிகையில் கூடச் சிலசமயம் குழப்பங்கள் நேர்வதுண்டு என்பதையும், இதனால் விருந்தினருக்கு ஏற்படக்கூடிய மனத்தாங்கல்களைச் சரிப்படுத்த, ஸி. ஆர். எவ்வளவு கவலையோடு முழு முயற்சி எடுத்துக் கொண்டார் என்பதையும் தெளிவுபடுத்துகிறது.

கவர்னர் மாளிகையில் விருந்துக்கு அழைக்கப்பட்டிருந்தார் டாக்டர் லோ. அவருடன் அவரது காரியதரிசிகள், மொழி பெயர்ப்பாளர் போன்றவரும் அழைக்கப்பட்டிருந்தனர். ஆனால், மாளிகை வாசலில் இருந்த காவலருக்கு அன்று விருந்தினர் வருவார்கள் என்பது தெரிவிக்கப்படவில்லை. அவர்கள், டாக்டர் லோவையும் உடன் வந்தவர்களையும் உள்ளே அனுமதிக்கவில்லை. கவர்னரின் விருந்தினரைத்தான் இப்படித் தடுத்து நிறுத்தி வைத்திருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளக் காவலருக்கு இருபது நிமிஷங்கள் பிடித்தன!

இதைவிட ஆச்சர்யமான விஷயம் என்னவென்றால் பண்பாடு கருதி, டாக்டர் லோவும் அவரது காரியதரிசிகளும், கவர்னரின் விருந்தினர்களான தாங்கள் இப்படி அவமதிக்கப்பட்டது பற்றி மூச்சுக் கூட விடவில்லை! அவர்களெல்லாம் விடை பெற்றுச் சென்ற பிறகுதான் ஸி. ஆர். தவறு நடந்து விட்டிருப்பதைக் கண்டுபிடித்தார். சீனத் தூதருக்கு மன்னிப்புக் கோரிக் கடிதம் எழுதினார். அதில்தான் எவ்வளவு பணிவு!

"என்னுடைய பழமையான நாட்டின் கல்விமான்களிடம், எனக்கு எவ்வளவு அன்பும் மரியாதையும் உண்டோ, அதே அளவுக்குத் தங்களிடமும் எனக்கு உண்டு. காலையில் தங்கள் இருப்பிடத்துக்கு நேரில் வந்து, உங்கள் முன் மண்டியிட்டு, உங்களுடைய காரியதரிசிகள், உதவியாளர்கள் முன்னிலையில் மன்னிப்புக் கோர வேண்டும் என்று எண்ணினேன். ஆனால் இது, எனது மனத்தில் ஏற்பட்ட காயத்தின் வலியைக் குறைக்குமென்றாலும் ஒரு நாடகமாகப் பிறர் கண்களுக்குத் தோன்றக் கூடும் என்றும் உணர்ந்தேன்.

"தங்களைப் பணிந்து மன்னிப்பு வேண்டுகிறேன்; மன்னிக்குமாறு கோருகிறேன். தங்கள் முன் எண்சாண் கிடையாக நான் விழுந்து கிடப்பதாக எடுத்துக் கொள்ளவும்.



"தீபாவளிக்கு உங்க கடையில் வாங்கின புடைவைக்கு ஒரு பிளாஸ்டிக் பக்கெட் இனாமாத் தந்தீங்களே...?"

"ஆமா..."

"இந்தாங்க அந்தப் புடைவை. இதை வச்சுக்கிட்டு இன்னொரு பிளாஸ்டிக் பக்கெட் கொடுங்க!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

எனது ஊழியர்கள் இந்தக் கடிதத்தைத் தங்களிடம் சேர்ப்பிப்பதற்குமுன் இதனைப் படித்துப் பார்க்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறேன். அவர்களை நீங்கள் மன்னிப்பீர்களாக. அவர்கள் இம்மாதிரி தவறினை எதிர்காலத்தில் என்றுமே செய்யாதிருப்பார்களாக."

**சொ**ற்பொழிவுகள்.... அரசின் பல்வேறு துறையினரிடம் பேசும்போது வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்பது போல் தான் வார்த்தைகளைப் பிரயோகித்தார் ஸி. ஆர்: "தபால் துறை, ரயில்வே இவற்றின் நிர்வாகம் சீரழிந்து வருகிறது. லஞ்ச ஊழல் பல இலாகாக்களில் புகுந்து கொண்டிருக்கிறது...." ராணுவ அதிகாரிகள், ராணுவப் பயிற்சி பெறும் இளைஞர்கள் ஆகியோரிடையே பேசும்போது குறை காண முடியாத சொற்களைக் கூறினார்: "பெரும்பான்மை பலத்துடன் ஆட்சிக்கு வருகிறவர்களிடமிருந்து கட்டளைகளைப் பெற வேண்டிய நிலையில் நீங்கள் இருந்தாலும், அனைத்து மக்களுக்காகவும் பணியாற்ற வேண்டிய கடமை உங்களுக்கு இருப்பதை நீங்கள் மறக்கவே கூடாது. உங்களுடைய துப்பாக்கியை எவ்வளவு நேராகப் பிடிக்கிறீர்களோ, அதேபோல் உங்கள் உள்ளமும் நேராக இருக்கவேண்டும். ராணுவத்துக்குப் பட்சபாதம் என்று இருக்கவே கூடாது."

**ஜ**னவரி 13—ம் தேதி மகாத்மா மீண்டும் ஓர் உண்ணாவிரதம் தொடங்கினார். தில்லியில் வாழ்கிற முஸ்லிம்கள் சீக்கியர்களாலும் ஹிந்துக்களாலும் துன்பப்படுத்தப்பட்டதையொட்டி அதற்குப் பரிகாரம் பெற உண்ணாவிரதத்தை ஆரம்பித்தவர், பாகிஸ்தானுக்குச் சேரவேண்டிய ஐம்பத்தைந்துகோடி ரூபாயை இந்திய அரசு கொடுக்காமல் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறது என்பதை அறிந்தபோது, உண்ணாவிரதத்தைத் தாம் கைவிட, அந்தப் பணத்தைப் பாகிஸ்தானுக்கு அளிக்க வேண்டியதையும் ஒரு நிபந்தனையாக்கினார். நேரு—பட்டேல் இடையே தோன்றிய கருத்து மாறுபாடுகள் அவரை வருத்தின. உண்ணாவிரதம், அவர்களை இணைத்து வைப்பதற்காகவும்தான் என்று பேசப்பட்டது.

நீண்ட காலத் தொடர்பில், மகாத்மாவின் எத்தனையோ உண்ணாவிரதங்களைப் பார்த்தவர் ஸி. ஆர். ஒவ்வொருமுறையும் அவருடன் வாதாடியும் இருக்கிறார். ஆனால் இந்த முறை, 'இந்த ஆபத்தான காரியத்தில் இறங்க வேண்டாம்; விட்டுவிடுங்கள்' என்று ஸி.ஆர். இறைஞ்சவில்லை. மாறாக, "இன்று நன்மதியுடன் நம்மிடையே விளங்குகிறவர் காந்தி ஒருவர்தான்; முன்பு இம்மாதிரி சந்தர்ப்பங்கள் பலவற்றில் நான் அவருடன் வாதாடியிருக்கிறேன்; ஆனால் இம்முறை எனக்கு வாதாடத் தோன்றவில்லை என்பதை நான் மனம் விட்டுச் சொல்லித்தான் ஆக வேண்டும்" என்றார் ஸி. ஆர்.

ஸி. ஆர். ஏன் இப்படிப் பேசினார் என்பதை நாம் ஊகிக்கத்தான் முடியும். காந்திஜியைப் போலவே அவரும் நடக்கின்ற சில காரியங்களைப் பார்த்து மனக் கசப்பு அடைந்திருக்கலாம். அதனால் 'காந்திஜியுடன் வாதாடி வெல்ல முடியாது, தவிர்க்க முடியாத உண்ணாவிரதம் இது' என்று எண்ணியிருக்கலாம். எவ்வாறானாலும் வங்கம் முழுவதிலும் கோயில்கள், மசூதிகள், சர்ச்சுகள், யூதர்களின் ஆலயங்கள் ஆகியவற்றில் விசேஷப் பிரார்த்தனைகள் நடக்க வேண்டும் என்று கோருவதுடன் நிறுத்திக் கொண்டார் ஸி. ஆர்.

தில்லியில் மகாத்மாவின் அருகே இருந்த ஷ்ரவர்த்தி கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தார். "தில்லியில் ஒருவேளை துரதிர்ஷ்டவசமான திருப்பங்கள் நிகழுமானால் என்ன செய்வது? அதனால் கவர்னர் ராஜகோபாலாச்சாரி என்னுடன் தில்லிக்கு வர வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வந்திருக்கிறேன்" என்றார். ஆனால் அதற்கு அவசியம் ஏற்படவில்லை. மத்திய அமைச்சரவையினரும் தில்லியின் ஹிந்து, சீக்கியத் தலைவர்களும் காந்திஜியின் நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டார்கள். ஆறாவது நாள் காந்தி தமது உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டார். தமது அச்சங்கள் பொய்த்துப் போனதில் நிம்மதியுற்ற ஸி. ஆர்., தமது மகிழ்ச்சியை வெளிப்படுத்தி காந்திக்கு எழுதினார்:

"உங்களுடன் பேசாமல் பேசிக் கொண்டிருந்தேன்" என்று எழுதிய ஸி. ஆருக்குத் தமது பதிலில், "என்னுடன் நீங்கள் மௌனமாக உரையாடியது சரியே" என்று குறிப்பிட்டார் காந்தி. மேலும், "அமைதியிலிருந்து புயலுக்கு நான் வந்து சேர்ந்திருக்கிறேன். நல்லவேளை, இரண்டையுமே சமமான மனப் பக்குவத்துடன் சந்திக்கக் கற்றுக் கொண்டிருக்கிறேன். இதற்காக ஆண்டவனுக்கு நன்றி செலுத்துகிறேன்" என்று எழுதினார். இதுவே காந்தி, ஸி. ஆருக்கு எழுதிய கடைசி கடிதமாக அமைந்தது.

ஜனவரி 30. மாலை ஆறு மணி அடிக்கச் சில விநாடிகளே இருந்தன. ஸி. ஆர். ஒரு பொதுக் கூட்டத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். போன் ஒலித்தது! ♩

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

** அடுத்தவன் உனக்கு என்னவெல்லாம் தரவேண்டும் என்று நீ விரும்புகிறாயோ, அவற்றை அடுத்தவனுக்கு நீ கொடு!

# “சுவாதி”

## சமையலுக்கு சுவையூட்டி சுகமளிக்கும்
## ஊறுகாய், சட்டினி, மசாலா வகைகள்

**விருந்தினரை வியப்பூட்டி விரும்பச்செய்யும் விதவிதமான தயாரிப்புகள்**




ஊறுகாய்கள்:
மாங்காய்
எலுமிச்சை
மிளகாய்
காய்கறிகள்
மற்றும் பல.




சட்டினிகள்:
கொத்தமல்லி
மிளகாய்
தித்திப்பு தக்காளி
மற்றும் பல.




மசாலாக்கள்:
சாம்பார்
ரசம்
இட்லி மிளகாய்ப்
பொடி
மற்றும் பல.

சுருச்சி பிக்கிள்ஸ் & காண்டிமெண்ட்ஸ்
ஏ6/3, 27, 11வது கிராஸ், பெசண்ட் நகர்
சென்னை-600 090.

KAN ADS 2199

ஸ்டோக்கிஸ்டுகள் மற்றும் வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன

அலங்கார் A/c
வசந்தி A/c
பகல் காட்சி
அனுஈகா A/c
4 காட்சிகள்
சூரியன் A/c
மகாராணி மற்றும் தமிழகமெங்கும்
தினசரி 3 காட்சிகள்

க.பாலசந்தர்
வழங்கும்




சங்கர்-கணேஷ் N. பாலகிருஷ்ணன் வைரமுத்து கணேஷ்-குமார்

# மனிதர்கள் காட்டும் ஒளிப்பாதை!



வாழ்க்கை வளம் பெற...

## 3

யார் வாழ்வினை மாஸ்லோ தமது ஆய்வுக்கு எடுத்துக் கொண்டார் என்கிறீர்கள்?

காந்தி போன்றவர்களை;
ஷ்வைஸ்டர் போன்றவர்களை;
ஆபிரகாம் லிங்கன்களை!

அவர்களிடம் மாஸ்லோ கண்ட குணங்களை நாமும் காண்போம்.

இவர்கள் கிட்டத்தட்ட அறுபது வயதை அடைந்தவர்கள். வாழ்வைப் பூரணமாக — மொத்தமாக வாழ்ந்து — முழு ஓட்டத்தையும் கண்டவர்கள். சிலர் தங்கள் துறைகளில் மகத்தான சாதனைகள் புரிந்திருப்பினும், சிற்சில குறைபாடுகளையும் கொண்டிருந்தார்கள். உதாரணம் கவிஞர் பைரன்; ஓவியர் வான்கோ.

இவர்கள் அறிவை முன்வைத்து உணர்ச்சியைப் பின்வைத்து எதையும் ஆராய்ந்தார்கள். ஒரு பாரபட்சமற்ற நோக்குடன் எதையும் அணுகினார்கள். பொதுவாக நாம் எதை ஆசைப்படுகிறோமோ அதைத்தான் கேட்க விரும்புவோம். இவர்கள் அப்படி அல்ல. தங்களது சொந்த அபிப்ராயங்கள் தங்களது பார்வையைப் பாதிக்காமல் கவனித்துக் கொண்டார்கள்.

பிறரைச் சரியாக எடை போட்டார்கள். எது போலி எது உண்மை என்பதை எளிதில் புரிந்து கொண்டார்கள். சொந்த வாழ்வில் சரியான பெண்ணைத் தேர்ந்தெடுத்து மனைவியாக்கிக் கொண்டார்கள். அவர்களுடன் இனிமையாகக் குடும்பம் நடத்தினார்கள்.

உலக விஷயங்களில் எது சரி எது தப்பு என்பதைப் பற்றியும் எது செய்யலாம் எது செய்யக் கூடாது என்பதைப் பற்றியும் அவர்களுக்குத் தெளிவு இருந்தது. ஒரு பிரச்னை என்று வரும்போது ஒரு தீர்மான முடிவுக்கு வரும் குணம் அவர்களுக்கு இருந்தது.

எளிமையாக வாழ்ந்தார்கள். 'கற்றது கை மண் அளவு' என்ற அடக்கம் இவர்களிடையே காணப்பட்டது. பிறரிடமிருந்து பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள ஆர்வம் காட்டினார்கள். தங்களைச் சரிவரப் புரிந்து கொண்டிருப்பதனால் ஏற்பட்ட ஒரு குணம் இது. அவர்களிடம் ஆணவம் இல்லை. ஒருகுழந்தை உலகைப் பார்ப்பது போல் அவர்கள் பார்த்தார்கள்.

எதையும் ஏற்றுக் கொள்ளும் மனோபாவம் அவர்களுக்கிருந்தது என்று சொல்லிவிட முடியுமா? முடியாது. அவர்களுக்கென்று சொந்த அபிப்ராயம் எதும் இல்லை என்று சொல்லிவிட முடியுமா? முடியவே முடியாது!

இந்த மனோபாவ அடிப்படையில் அவர்கள் முடிவெடுத்தார்கள். தீர்மானம் செய்தார்கள். உண்மைகளைக் கண்டார்கள். திட்டமிட்டார்கள். செயல் புரிந்தார்கள். ஏதாவது ஒன்றில் — முக்கியம் என்று தாங்கள் கருதிய காரியத்தில், லட்சியத்தில் அல்லது தொழிலில் அவர்கள் வாழ்நாள் முழுதும் ஈடுபட்டிருந்தார்கள். அதிலே கஷ்டப்பட்டு உழைத்தார்கள்.

'இப்படி உழைக்கிறார்களே, விளையாட்டு, பொழுதுபோக்கு என்ற ஏதும் இவர்களுக்கு இருப்பதில்லையா?' என்று நாம் கேட்கக் கூடும்.

இவர்களிடம் அருமையான நகைச்சுவை இருந்தது. விளையாடினார்கள்; வேடிக்கைகளில் ஈடுபட்டார்கள். பெரும்பாலும் வேலையே விளையாட்டு போல் சவாலாக இருந்தது இவர்களுக்கு.

அவர்களிடம் ஆக்க சக்தி கொண்ட அபார மனம் இருந்தது. அது மனிதத் தன்மையுடன், ஆரோக்கியமான உடலுடன் செயல்பட்டது. அனுசரிப்பு, பீரிட்டெழும் இயல்பு, தைரியம், தவறு நேர்ந்தாலும் நிலைகுலைந்து போகாத மனம், திறந்த மனம் — இவை அவர்களிடையே இருந்தது. பிறர் பரிகாசம் செய்வார்களே என்று நினைக்காத குழந்தை போல அவர்கள் செயல்பட்டார்கள்.

இந்த உயர் குணங்கள் போகப் போக வயதேற ஏற, சில சமயம் இவர்களிடை மங்கிப் போயிற்று. ஆனால் தாற்காலிகமாக அவற்றை இழந்தாலும், மீண்டும் அந்த உயர் குணங்களையே புகலிடமாகத் தேடி வந்து விடுகிறார்கள் இவர்கள். பீரிட்டெழும் இயல்பு என்று கூறினேனே (Spontaneity) அதை விளக்குவதானால், அவர்களால், சொன்ன மாத்திரத்தில் கண்ணதாசன் போல ஒரு கவிதை பாட முடியும், பால சரஸ்வதி போல ஓர் அபிநயம் செய்து காட்ட முடியும்.

இந்த ஆக்க சக்தியின் உத்வேகம்தான்

** எதையும் சரியான அளவில் செய்யப் பழகவேண்டும். நல்ல விதைகளானாலும் வயலில் மிதமிஞ்சித் தெளிப்பதில் பயனில்லை. வீண் நஷ்டம்.

மனிதர்களைக் கவிஞர்களாகவும் காவியம் படைப்பவர்களாகவும், இசை — நாட்டிய மேதைகளாகவும், மகத்தான விஞ்ஞானிகளாகவும் ஆக்குகிறது. ஆனால் இவர்களது ஆர்வம்உத்வேகத்துடன்நின்றுவிடுவதில்லை. உத்வேகத்தையொட்டி, தொடர்ந்து உழைப்பு — உழைப்பு — உழைப்பு என அவர்கள் உழைப்பினால் காரியத்தை முடித்து நிறைவேற்றினார்கள்.

மகாபாரதம் எழுதிய வியாச முனிவரை எண்ணிப் பாருங்கள். உத்வேகம் எழுந்துதான் எழுதத் துவங்கினார். ஆனால் எத்தனை உழைப்பு, எத்தனை நாள் — மாதம், ஆண்டு என்ற உழைப்பு மகாபாரதம் என்ற மகத்தான காவியத்தை உருவாக்கியது என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

அவர்கள் தங்களைப் பற்றி நொந்து கொண்டதில்லை; எரிச்சல் பட்டதில்லை; 'என்னை எனக்கே பிடிக்கவில்லை' என்று சொன்னதில்லை. ஆகவே அவர்களது சக்தி— வருத்தத்திலும், தன்னைத் தானே உழப்பிக் கொள்வதிலும் செலவாவதில்லை; ஆக்கபூர்வமான காரியங்களில் செலவாயிற்று.

விஞ்ஞான பூர்வமாக விஷயங்களை அணுகும்போது — மனிதர்கள் சிலசமயம் மனிதத் தன்மையற்று யந்திரங்களாக மாறிவிடுகிறார்கள் என்று சிலர் குறைப்படுவதுண்டு. ஆனால் மாமனிதர்களோ தங்களது விஞ்ஞான அறிவும், அனுபவமும், பண்புகளும், பிரபஞ்ச உண்மைகளும் ஒன்றுக்கொன்று அனுசரணையாக இழைந்து இயங்கக் காண்கிறார்கள். உண்மை எதுவோ, அது நன்மை தருவதாயும், அழகாக இருப்பதாகவும், அவர்கள் நம்புகிறார்கள்.

மத நூல்கள் பெரும்பாலும், மனிதன் முழுக்க முழுக்கச் சுயநலமற்று வாழ வேண்டும்என்று வலியுறுத்துகின்றன. ஆனால் இவர்களோ மனித வாழ்வில் சுயநலமும் பொது நலமும் சேர்ந்துதான் செயல்படுகிறது என்பதை உணர்ந்து வாழ்கிறார்கள்.



மனிதன் நல்லவற்றிற்கும் கெட்டவற்றிற்கும் இடையே போராடுகிறானா? அதுதானா வாழ்க்கை? என்ற கேள்விகள் எழலாம். அத்தகைய போராட்டம் உண்மையாக இருக்கலாம். ஆனால் உயர் மனிதர்களோ, மகாத்மா காந்தி கூறியதுபோல, "நல்லவற்றை நாடும் பேரவாதான் உலகை இயக்குகிறது; அதுதான் கெட்டவற்றை மிஞ்சுகிறது" என்ற நம்பிக்கை கொண்டு வாழ்கிறார்கள். காரியம் செய்கிறார்கள்.

இயல்பாக இவர்களுக்குச் சீடர்கள் கூட்டம் ஏராளம். தங்களது கும்பலின் குறைபாடுகளை இவர்கள் சகித்துக் கொள்கிறார்கள். அதேசமயம் ஏமாற்று, பொய், கொடுமை என்பவற்றை அவர்கள் ஏற்பதில்லை. அநியாயம் கண்டவிடத்துப் போர்க் கொடி தூக்கிப் போரிடும் உள்ளம் கொண்டவர்கள் இவர்கள்.

அவர்கள் வாழ்வில் சங்கடம் இல்லாமல் இல்லை. ஆனால் அவர்கள் அதை மிகைப் படுத்தாது மகிழ்வை அதிகம் அனுபவிக்கிறார்கள். உபயோகமற்ற பேச்சுக்களையும் அக்கப்போர்களையும், கிசுகிசுக்களையும் அவர்களால் சகித்துக் கொள்ள முடிவதில்லை. பிறரை உபயோகிக்கும் சுயநலம் அவர்களிடம் இல்லை. எல்லோரையும் மரியாதையுடன் நடத்துகிறார்கள். பாரதியாரின், "யாரையும் மதித்து வாழ்" என்ற ஆத்திச்சூடி அவர்களது வாழ்வின் தாரக மந்திரமாக இயங்குகிறது. எதையும் சமாளிக்கும் மன இயல்பு கொண்டவர்கள் இவர்கள்.

தெரியாத விஷயங்களும் மறைபொருள்களும் புரிந்து கொள்ள முடியாத விஷயங்களும் இவர்களை வசீகரிக்கின்றன. விஞ்ஞானி ஐன்ஸ்டைன் இதற்கு ஒரு நல்ல உதாரணம். அவர் கூறுகிறார்: "உலகிலேயே மிக அழகான, அதிசய அனுபவம், தெரியாத விஷயங்களைப் பற்றியதுதான். கலையும் விஞ்ஞானமும் பிறப்பதற்கே அதுதான் காரணம்."

பிராய்டு, 'ஆழ் மனம் சுய போராட்டத்தில் ஈடுபட்டிருப்பதாகக் குறிப்பிடுகிறார். ஆனால் மாஸ்லோ 'ஆழ் மனம் அன்பு கொண்டதாகவும், ஆரோக்கியமானதாகவும், மகத்தான ஆக்க சக்தி படைத்ததாகவும்' இருக்கக் காண்கிறார்.

வாழ்வே மாமனிதனுக்கும் முயற்சிதான். அதுதான் நோக்கம் என்றால், பரிணாம வளர்ச்சி அதை நோக்கித்தான் செல்கிறது என்பது உண்மையானால், நாம் மாமனிதர்களையும், அவர்களது குணங்களையும் அறிந்து கொள்ள வேண்டும்; வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும். அப்போதுதான் நமது முழுத் திறமைகளும் வெளிப்பட்டு, அவை பூரணத்துவத்தை நோக்கி நம்மை அழைத்துச் செல்லும்.

— டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

# பருவராகம்

முதல் பாதி முழுக்க முழுக்க ஒளியும் ஒலியும் தான். கதை ஒரு இன்ச் கூட நகர மாட்டேன் என்கிறது. ஆனால் படத்தின் ஒவ்வொரு சென்டி மீட்டரிலும் இளமை துள்ளுகிறது.

பெயர் காட்டும் விதத்திலேயே புதுமை.

பாடல் காட்சிகளை அமைத்திருக்கும் விதத்தில் புதுமை.

மோட்டார் சைக்கிள்களின் சீறல்களோடு காட்டப் படும் ஸ்டன்ட் சீன் ஒரு புதுமை.

இந்தப் புதுமை விரும்பி டைரக்டருக்கு அபார கற்பனை வளம்.

கதையின் நாயகர், ரவிசந்திரன் என்னும் புதுமுகம்.

கதை, திரைக்கதை, தயாரிப்பு, டைரக்ஷன் எல்லாம் இவரே.

உறுத்தாத முகம். இயல்பான நடிப்பு. தமிழ்ப் பட உலகில் இவருக்கென்று ஓர் இடம் நிச்சயம் காத்திருக்கிறது.

ஹீரோயின் ஜூஹியும் தமிழ்த் திரைக்கு ஒரு வித்தியாசமான முகம். புதுமுகம் என்னும் பேரோடு எங்கேயும் தெரியாத அளவிற்குச் சமாளித்திருக்கிறார். நின்று விடுவார்.

சோ தலைகாட்டுகிறார் என்றவுடன் ஏகப்பட்ட இடித்துரைத்தல்கள் இருக்கும் என்று எதிர்பார்த்தால் மிகப் பெரிய ஏமாற்றம். மனிதர் வருவதும் தெரியவில்லை. போவதும் தெரியவில்லை.

இசையமைத்திருக்கும் அம்சலேகாவைப் பற்றிச் சொல்லியேயாக வேண்டும். இளையராஜாவின் சாயலும் இல்லாமல், எம்.எஸ்.வி.யின் பாதிப்பும் இல்லாமல் ஒரு புது இசையமைப்பாளர். கங்கிராட்ஸ்!

ஒரு சாதாரண காதல் கதையை, பிரமிப்பு ஏற்படுத்தும் அளவிற்கு சினிமாஸ்கோப் சைஸில் காட்டியிருக்கும் வி. ரவிசந்திரன் நிச்சயம் கைகொடுத்துத் தூக்கப்பட வேண்டியவர். ஆனாலும் ரவிசந்திரன் சார், அடுத்த படத்தில் பாடல்களைக் கொஞ்சம் குறைத்துக் கொள்ளுங்களேன்!





# ராஜமரியாதை

பிரும்மச்சாரி எம்.டி. சிவாஜிக்குப் பருவப் பெண்கள் என்றாலே அலர்ஜி. அவருக்குக் கீழே வேலை செய்யும் கார்த்திக்கிற்கோ ஜீவிதா மீது காதல்.

காதலியின் வற்புறுத்தலால் எம்.டி.க்குத் தெரியாமல் காதலியைக் கைப்பிடிக்கும் கார்த்திக் சொந்த ஊரில், மனைவியுடன் கொஞ்ச முடியாமல் தேனிலவிற்கு ஊட்டிக்குப் போக (எங்க பாட்டி செத்துப் போய்ட்டாங்க சார். ஒரு பத்து நாள் லீவு வேணும் சார்) அதே ஊட்டிக்கு எம்.டி. சிங்கம் சிவாஜி தொழில் ரீதியாக வந்து சேர —

கலாட்டாதான்.

பொடி போடுவதற்கு உன்னதமான வழியாகக் கல்லாப் பெட்டி தேர்ந்தெடுத்திருக்கிறாரே. ஒரு வழி, பலூனைப் பெரிதாக ஊதி அதன் காற்று வாயில் பொடியை வைத்து மூக்கில் செலுத்தும் உத்தி. கொக்கு தலை வெண்ணெய் என்றாலும் கலகலப்புதான்.

கார்த்திக்கின் வழிசல் நடிப்பு நல்ல சதைப் பிடிப்புடன் இருக்கிறது.

சிட்டுக் குருவி லேகியம் விவகாரம் கொஞ்சம் ஓவர் ரகம். செந்தில், டிஸ்கோ சாந்தி சல்லாப சமாசாரமும் டிட்டோ.

அனுராதாவிற்கும், டிஸ்கோ சாந்திக்கும் வஞ்சிக் கோட்டை வாலிபன் ஸ்டைலில் ஒரு போட்டி நடனம். ஏன் டைரக்டர் ஸார், இன்னும் இந்த அரைகுறை ஆடை நடனங்களுக்கெல்லாம் மவுசு இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்களா என்ன?

'ஏஜ்—மிரேஜ்' என்று சிவாஜி தனக்கே உரிய பாணியில் ஒருமுறை சொன்னால் நன்றாக இருக்கிறது. இரண்டு முறை சொன்னால் போனால் போகிறது. திருப்பித் திருப்பிச் சொன்னால்....? போய்யா, இந்த மனுஷருக்கு வேறே வேலை இல்லே!

ஏ. நகார ஜனகராஜ் வசனங்களை உச்சரிக்கும் விதத்தில் தான் கிளப்பியிருக்கிறார். சரி, அதற்காக இப்படியா இரைவார் மனிதர்?

பாடல்கள் எல்லாம் கேட்கும்படியாகவே இருக்கின்றன. சங்கர்—கணேஷ் உழைத்திருக்கிறார்கள்.

நன்றாக கலகலப்பாகப் போய்க் கொண்டிருந்த படத்தில் சிவாஜி அழ வேண்டும் என்று யார்தான் ஆசைப்பட்டார்களோ? அதற்காக என்று ஒரு சாதனாவைக் கொண்டு வந்து, அவரைச் சாகடித்து.... படத்தில் இந்தப் பகுதிதான் ஜவ்வு. இடைச் செருகலாக இந்தச் சாதனாவின் காதல் கதை மட்டும் இல்லாமல் இருந்திருந்தால் முழு நீள நகைச்சுவைச் சித்திரம் என்று முத்திரை குத்தி இருக்கலாம்.

— ஜெயமன் மதன்

வட்டமேஜை

# எங்கள் இதயத்திலும் அடி விழுந்தது!

* பரஞ்சோதியின் அடி டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி அவர்களின் மீது விழுந்ததுபோல எங்கள் இதயத்தின் மீதும் விழுந்தது. 'இந்த உபயோகமற்ற அரசாங்கத்தை நாம் தூக்கியெறிய வேண்டும்' என்று கருதிச் செயல்படும் திறன், நம் மக்களுக்கு இல்லை என்பது நூற்றுக்கு நூறு உண்மையான வார்த்தை!

— என். சந்திரசேகரன்,
கோட்டாத்தூர்.

* நாலுபக்க விளக்கத்தை நறுக்கென்று கால் பக்கத்திலேயே காட்டுவதுதான் கார்ட்டூன். அப்படியே பிரதிபலித்துக் காட்டி ஒவ்வொரு வாரமும் கார்ட்டூனில் தான் இளைப்பும் நீர் 'கார்ட்டூன் திலகம்' தான்.

— எம்.எம். ஷர்புதீன்,
தோப்புத்துறை.

* நூலகம் பற்றிய தலையங்கம் இதழுக்கே மணி மகுடமாக அமைந்திருந்தது. பொன்னையனைப் பாராட்டி, தங்களின் நடுநிலைமையைக் காட்டியதோடு அருமையான அறிவுரையையும் கூறியிருந்தீர்கள். சில எதிர்க்கட்சி இதழ்களுக்குத் தடை விதித்திருப்பதையும் கண்டித்திருக்கலாம்.

தலைப்பு நல்லா இருந்தா, டப்பா படத்துக்கும் விமர்சனம் எழுதிடறதா...? ஒரு இனிய உதயம் பட விமர்சனத்தைத்தான் சொல்கிறேன். அதுசரி, படத்தை எந்த டூரிங் டாக்கீஸில் (தூரத்தி) பார்த்தீர்கள்...?

— எஸ்.ஜே. இதயா,
மதுரை-20.

* ஒரு கிராம மக்களின் கால்நடைகள் அத்தனையையும் பாதிக்கும் புகை விஷயத்தை அலட்சியம் செய்யும் அதிகாரிகள் சமூகப் பிரக்ஞை அற்றவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். ஆளும் கட்சிக்காரர்களின் அட்டகாசப் போக்குக்கு ஜால்ரா போடுவது தமிழகத்துக்கே ஒரு சாபக்கேடு. இச்சிகா மலைப்பட்டி கிராம மக்களைக் கடவுள் காப்பாற்ற வேண்டும்.

— இராம. ஜோதிவேல்,
கத்தரிப்புலம்.

* 'ஐயா புகையை நிறுத்துங்க, இல்லேன்னா, துளி விஷத்தைக் குடுத்திடுங்க..' இந்த வரிகள் கண்ணைக் கலங்க வைத்தன. எவ்வளவு துயரத்தை அடைந்திருந்தால் இந்த வார்த்தை அவர்களிடமிருந்து வந்திருக்கும் என்பதை உணர முடிந்தது.

— எச்.கே. நாசர்,
தோப்புத்துறை.

* 20-ஆம் நூற்றாண்டில் இப்படி ஒரு எம்.எல்.ஏ.வா? என்று வியக்க வைத்துவிட்டார் குளத்தூர் தொகுதி மாரிமுத்து அவர்கள். அதுவும் அ.இ.அ.தி.மு.க.வில் இப்படி ஒரு எம்.எல்.ஏ. இருப்பதைக் கல்கியின் மூலம்தான் தெரிந்து கொண்டோம்.

எஸ். சண்முகம்,
சீர்காழி.

* இவ்வாரச் சிறுகதைகள் அனைத்துமே தரமிக்கதாயிருந்தன. குறிப்பாக மும்தாஜ் யாசினின், 'விளையாடுகளை'ச் சொல்ல வேண்டும்.

— இரா. வளையாபதி,
தோட்டக்குறிச்சி.

* ஒரு சிறுவனின் குழந்தைத்தனமான எதிர்பார்ப்புகளைக் காட்டி, அவன் உள்ளத்தே சுடர் விடும் எண்ணங்களுக்கும் அர்த்தமுண்டு, என்று சொல்லாமல் சொன்னது 'ராமுவும் அப்பாவும் அந்த சலூனும்' என்ற சிறுகதை.

— கா.சு.சே. ரோகிணி,
ஒண்டிப்புதூர்.

* மாவட்டங்களில் நிலவும் குறை நிறைகள் பற்றி எழுதி வரும் கல்கியின் சேவைக்கு பாராட்டோ பாராட்டு! ஒரு வேண்டுகோள் — 18.1.87 இதழ், 4-ஆம் பக்கம் — வெள்ளாதளம்; அதே இதழ் கடைசிப் பக்கம் — ராஜகோபாலபுரம் — இந்த ஊர்கள் எங்கே இருக்கின்றன என்கிற விவரத்தைத் துளியூண்டு — பளிச்சென்று ஆரம்பத்திலேயே குறிப்பிட்டால் அழகாக இருக்கும்.

— கொ.வே.ரா.
சென்னை-78.

**Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032.**

**Editor: K. Rajendran**

*Editorial Office:* 28, Fifth Street, Lake Area, Nungambakkam, Madras-600 034. (Phone: 473389)
*Administrative Office:* Race Course Road, Guindy, Madras-600 032 (Phones: 431543, 434157 Press: 434190)

# உண்மையிலேயே பாதுகாப்பை விரும்புவோருக்கு!

# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

சென்னை

(Unit of and Agents for Jayasakthi Group of Finance Companies)

குறைந்த பட்ச டெபாசிட் ரூ. 5000/- ஏற்றுக் கொள்ளப்படும்.

ரூ. 10,000/-க்கு மேல் டெபாசிட் செய்யும் ஒவ்வொரு டெபாசிட்தாரர்களுக்கும் ஊக்க போனஸாக 2% கூடுதல் வட்டி மற்றும் மிக மதிப்புள்ள அன்பளிப்பும் வழங்கப்படும்.

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

**1-வருடம் 18%**

**2-வருடங்கள் 19%**

**3-வருடங்கள் 20%**

**5-வருடங்கள் 24%**

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி

சென்னை : 39, நடேசன் தெரு (2வது மாடி) சிவா-விஷ்ணு கோவில் அருகில் உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494.

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் : 366971.

பாண்டிச்சேரி : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) 2வது மாடி, பாண்டிச்சேரி-605 001. போன் : 6493.

கோயமுத்தூர் : 666, ராஜா தெரு (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001. போன் : 34369.

மதுரை : 41, வடக்கு வெளி வீதி (முதல் மாடி) மாடர்ன் வாட்ச் கடையில், மதுரை-625 001. போன் : 36004

திருச்சி : 22, மதுரை ரோடு (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில் திருச்சிராப்பள்ளி-620 008. போன் : 20772/31376.

தஞ்சாவூர் : எண் : 2 & 3 முதல் மாடி, தி.ச.கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன் : 21626/22286.

திருவண்ணாமலை : 14/A, ஆனைகட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 2483.

பட்டுக்கோட்டை : 121, தலையாரி தெரு, (முதல் மாடி) பட்டுக்கோட்டை-614 601. போன் : 453.

LOTUS/JF-127/86/Tam

# எங்களுடைய பணி தொழிலாளர்களுக்கு சம்பளம் அளிப்பதோடு நின்றுவிடவில்லை



எம்.ஆர்-எல்-லில் ஒவ்வொரு ஊ
யரும் குடும்பத்தின் ஒரு உறுப்பின
போல பாச உணர்வுடன் கவனிக்
படுகின்றனர். இம்மாதிரியானதெ
கொள்கையுடன் இயங்குவது தொ
லாளர் நேச உறவு முறைகளுக்கு
ஒரு திருப்பு முனையாக இருந்து
நடை முறையில் மிகவும் வெற்றிக
மாக அமைந்துள்ளது.

அதனால்தான் சுத்திகரிப்பு ஆல
துவக்கப்பட்டதிலிருந்து கடந்த 20
ஆண்டுகளில் தொழிலாளர் பிரச்
சனைகளால் ஒரு நாள் வேலை கூ
இழக்கப்படவில்லை, நிச்சயமாகப்
பெருமைப்பட வேண்டிய சாதனை
தான் இது; அதுவும் முதன் முதலா
துவக்கப்பட்ட பொதுத் துறை நிறு
வனங்களில் ஒன்று அறிமுகப்படுத்
செயல்படுத்தப்பட்ட 'தொழிலாளரு
நிர்வாகத்தில் பங்கேற்கும்' முறை
அளித்த சிறப்பு இது. இதனால்
ஒவ்வொரு ஊழியரும் 'நமது நிறு
வனம்' என்ற பெருமித உணர்
வினைப் பெற்று உரிமை கொண்
டாடுவதில் வியப்பொன்றுமில்லை
அத்துடன், இந்த சுத்திகரிப்பு
ஆலைக்கு ஒரே தொழிலாளர் சங்க
மாகத் திகழும் இது ஊழியர்களிட
மிருந்தே தலைமைப் பொறுப்பினை
அமைத்துள்ள ஒரு தனிச்சிறப்புட
திகழ்கிறது.

எம்.ஆர்.எல், தன்னுடைய ''ஊழ
யர் கொள்கையை'' ஒப்பந்தத்
தொழிலாளர்களுக்கும் விஸ்த்தரித்
துள்ளது. 1983இல் இந்நிறுவனம்,
ஒரு தொழிற்துறைக் கூட்டுறவுச்
சேவை சங்கத்தினை ''எம்.ஆர்.எ
இண்ட்கோசர்வ்'' என்ற பெயரில்,
ஏற்கனவே ஒப்பந்தக்காரர்களுக்கு
அளித்து வந்த வேலைகளை எடுத்
கொள்வதற்காக நிறுவியது.
சுமார் 800-க்கும் மேற்பட்ட தொழி
லாளர்களை உறுப்பினர்களாகக்
கொண்ட இச்சங்கம் பல குடும்பங்
களுக்குப் பல வழிகளில் பலன்களை
அளித்து வருகிறது.
முன்பு ஒப்பந்தப்படி ஒரு நாளைக்கு
ரூ. 5/- எனப் பெற்று வந்த தொழி
லாளர்கள் ஒவ்வொரு மாதமும்
ரூ. 500/- சம்பாதிப்பதற்கு வகை
செய்துள்ளது.

தொழிலாளர்களுக்கு குரூப் 'இன்சூ
ரன்ஸ், பிராவிடண்ட் பண்ட், மருத்
துவச் செலவு போன்றவைகளை
அளிக்கிறது.

மேலும், தொழிலாளர்களுக்குக்
குறைந்த விலையில் கேன்டீன்
வசதிகள், சீருடைகள், மழைக்
கோட்டுகள் மற்றும் தனி நபர் பாது
காப்புச் சாதனங்கள் கிடைக்க வழி
செய்கிறது.

**நாட்டின் வளத்தைப் பெருக்க உதவும் நேசக்கரம் — எம்.ஆர்.எ**

**மதராஸ் ரி:பைனரீஸ் லிமிடெட்**

477-482 அண்ணா சாலை, நந்தனம்
சென்னை-600 035